# கல்கி

KALKI 14.2.93 ரூ. 3.00







## சென்னை டெஸ்டும் அஷாரின் எதிர்காலமும்

—சிறப்புக் கட்டுரை

# சில குழந்தைகள் மற்றவர்களை விடத் துறுதுறுவென இருப்பது ஏன்?

துறுதுறுவென இருப்பதற்குத் தேவையான சக்தியைப் பெறுவதற்கு, உங்கள் குழந்தைக்குச் 'சரியான' கலோரிகள் தேவை. புரோட்டீன்களும், கார்போஹைட்ரேட்ஸும், கொழுப்புச் சத்தும் சரியான சமச்சீர் விகிதத்தில் கலந்திருந்தால் தான் இந்தக் கலோரிகள் கிடைக்கும்.

இந்தச் 'சரியான' கலோரிகள் கிடைக்க வேண்டுமானால் அதற்குச் சிறந்த வழி ஊட்டச் சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த உணவைக் கொடுக்க வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார். உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபிறகு பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு வேளையும், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவை உங்கள் குழந்தைக்குத் தர வேண்டும்.

பெரும்பாலான தாய்மார்களுக்கு இது முடிவதில்லை. வழக்கமான உணவு வகைகள் சரிப்பட்டு வருவதில்லை.

பிறகு என்னதான் வழி?

ஸெரிலாக். ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த, உங்கள் குழந்தைக்கு மிகவும் பழக்கமான பாலின் எல்லா நற்பயன்களும் அடங்கிய திட உணவு. வளரும் குழந்தைகளுக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த பால் புரோட்டீன்கள் இதில் உள்ளன. மேலும், கொழுப்புச் சத்துக்கள், கார்போஹைட்ரேட்ஸ், இரும்புச்சத்து, கால்ஷியம் ஆகிய சத்துக்கள் சரியான அளவில் கலந்த உணவு ஸெரிலாக். வைட்டமின்கள் A, D, E, B- காம்ப்ளெக்ஸ், மற்றும் C இதற்குப் பலம் சேர்க்கின்றன.

இன்னுமொரு சிறப்பு. ஸெரிலாக் இப்போது நெஸ்லேயின் புரட்சிகரமான புதிய Z-லேன் என்ஸைமேட்டிக் முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகின்றன. ஸெரிலாக் மிக எளிதில் ஜீரணமாகிவிடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் ஸெரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் 'சரியான' அளவு கலோரிகள் உள்ளன. ஏனென்றால், இதில் பாலின் நற்பயன்கள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை துறுதுறுவென இருப்பதற்குத் தேவைப்படும் ஊட்டச்சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த திட உணவு ஸெரிலாக்.






இலவசம். ஸெரிலாக் பேபி கேர் புத்தகம். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கான கையேடு. உங்களுக்கு விருப்பமான மொழி ஆகிய விவரங்களோடு எழுதுக: ஸெரிலாக், தபால் பை எண். 11, புதுதில்லி-110 001.

**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்.**

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.

# Vமர்சனம்

●● மக்களின் ஸ்டார் டீ.வி. மோகத் தைக் குறைக்கவும், உள்ளூர் டீ.வி. நிகழ்ச்சி களின் தரத்தை அதிகரிக்கவுமாக, தனியார் நிகழ்ச்சிகளை இரண்டாவது சேனலில் ஒளி பரப்ப ஆரம்பித்திருக்கிறார்கள். சரியான திட்டமிடல் இன்மை, போதிய அவகாசம் இன்மை, தெளிவான குறிக்கோள் இன்மை, இன்னும் பல 'இன்மை' காரணங்களினால் இந் நிகழ்ச்சி - வரவேற்பு இல்லாதது போகட்டும் - ஆங்காங்கே முணுமுணுப்பை ஏற்படுத்தியிருக்கிறது. முதல் நாள் நிரைத் தொடர், திரை தேன் ('த்' இல்லாமைக்கு நான் பொறுப்பல்ல.) மறுநாளிலிருந்து முன்பே பார்த்து விட்ட Derrick - ஆங்கில சீரியல். சாதாரணமாகவே இரண்டாவது சேனல், உப்பிலியப்பன் கோவில் நைவேத் யம் மாதிரி. இந்த நிகழ்ச்சியினால் மட்டும் புதுசாக ஒன்றும் மாறுதல் இல்லை.

●● டீ.வி.க்கு நாடகம் எழுத விரும்பு வோர், 'மடத்துக்குளம் சித்ரா'வை (கதை, வசனம் : பி.வி.ஆர்) முன்மாதிரியாகக் கொள்ளலாம். ரொம்ப ரொம்ப சாதாரண, நைந்து போன, முக்கோணக் காதல் கதைக்கு ஜரிகை பார்டர் வைத்து, கச்சிதமாக அளவெ டுத்து, சிலபல ஜில்பால் வேலைகள் காட்டி, அரைமணி பொழுது போனது தெரி யாமல் செய்தமைக்காக கதாசிரியரைப் பாராட்டலாம்.

●● ஷெல்லி, விவேகானந்தர், அர விந்தர் மற்றும் சிலருடன் பாரதியை ஒப் பிட்டுப் பலர் பேசின, எங்கோ நடந்த கருத்தரங்கத் தொகுப்பு (சிதைப்பு?) முத் தமிழ் மன்றத்தில். நிகழ்ச்சிக்கு, அறிவித்த தலைப்பு : 'ஞானரதம் - கருத்தரங்கம்' பாரதி யின் ஞானரதத்தை எதிர்பார்த்திருந்தவர் களுக்கு இமாலய ஏமாற்றம்.

●● பில் கிளின்டன் பிபிஸி நியூஸ், மெட்ராஸ் நியூஸ், World this week ஆகிய வற்றில் ஜெயித்தார். உற்சாக மழை யில், ஜோடி சேர்ந்து டான்ஸ் ஆடினார். வாத்ய கோஷ்டியிடமிருந்து சாக்ஸஃபோன் வாங்கி, வாயில் வைத்து என்னமோ பண்ணினார். அந்தக் கோலத் தில் அவரைப் பார்த்ததில், ஜனாதிபதி தேர்தலில் ஜெயித் தவர் போலத் தெரியவில்லை. அரை டிராயரிலிருந்து ஃபுல் பேண்ட்டுக்குப் பிரமோஷன் கிடைத்த சிறுவ னின் உற்சாகம்!



* மூன்மாதிரி

●● ஞாயிறு படம் - பாலசந்தரின் 'புன்னகை.' 30-ஆம் தேதி காந்தி நினை வுக்கு 31 ஆம் தேதி டீ.வி.யின் அஞ்சலி. நாடக வாடை ஏக மாய் இருப்பினும், நயமான காட்சிகளும், வலுவான வச னங்களும் அநேகம். பால சந்தருக்கு இரண்டு கேள்வி கள்.



* இரண்டு கேள்விகள்

1. எந்தப் பெண், தன் மானம் போகிற இக்கட்டில் 'ஆணையிட்டேன், நெருங் காதே' என்று பாட்டுப் பாடு வாள்?

2. காந்தி வழி போகி றவனெல்லாம் வறுமையில் வாடி, கிட்னி ஃபெயிலியர் ஆகி, சாகத்தான் வேண் டுமா?



* சுவாரஸ்ய கிரிக்கெட்டில் வினாடி வினா

●● இங்கிலாந்தின் தற் போதைய இந்திய டூரில் காணாமல் போயிருக்கும் இயான் போத்தம், அடிக்கடி பிபிஸியில் காட்சி தருகிறார். பிபிஸி நடத்தும் விளை யாட்டு வினாடி வினாக்களில் அவரை அதிகம் பார்க்க முடி கிறது. சுவாரஸ்யமான கிரிக்கெட் நிமிஷங் களின் இடையிடையே ஃப்ரீஸ் பண்ணி, அந்த ஃபீல்டர் யார், இது எந்த ஸ்டேடியம் என் கிற மாதிரியான கேள்விக ளுக் கெல்லாம் கர்ம சிரத்தை யாய் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறார்.



* ஃபுல்பாண்ட் பிரமோஷன்!

●● 'அச்சீ பால்', 'குட் ஷாட்', என்பது போன்ற ரெடிமேட் வருணனை கேட்டு அலுத்தவர்கள் பிரைம் ஸ்போர்ட்ஸ் சானலை முயற்சி செய்யலாம். கிரிக்கெட் இல்லாத பிற விஷயங்களின் பொருத்தமான இணைப்பும், பழைய நிகழ்ச்சிகளை தூசி தட்டி நுழைக்கும் பாங்கும், ரசனையைத் தூண்டும் ஸ்பெஷல் கிளாஸ் கிண்டல் களும், அடுத்தடுத்த 'மூவ்' பற்றின ஆருட ஆராய்ச்சிகளும் அதிக பட்ச சுவாரஸ்யம் உண்டு பண்ணுபவை.

- கிச்சா

## இரண்டாவது சானல்: உப்பில்லாச் சாப்பாடு!




''கம்பன் கவி அமுது'' காஸெட் வெளியீட்டு விழா மேடை... ஹெச்.எம்.வி. நிறுவனத்தைச் சேர்ந்த ஜெ. முத்துக்குமார், நீதிபதி மு.மு. இஸ்மாயில், கோவை லக்ஷ்மி மில்ஸ் அதிபர் ஜி.கே. சுந்தரம், முன்னாள் ஜனாதிபதி ஆர். வெங்கடராமன், ஆகியோருடன் சதாசிவம் - எம். எஸ். தம்பதி.

# அமுதக் குரலில் கம்பன் கவி அமுது!

'கம்பன் கழகம்' நிறுவி, ஆண்டு தோறும் கம்பன் விழா நடத்தி வருகிறோம். சில ஆண்டுகளில் தொடக்க தினத்தின் போது கடவுள் வாழ்த்துப் பாட ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் அழைக்கப் பட்டு வந்ததுண்டு.

எனக்கு இசையின் நுணுக்கங்கள் தெரியாது; ஆனால் நல்ல இசையில் என் மனம் லயிக்கும். அதிலும் எம். எஸ். அவர்கள் பாடும் போது அதில் உள்ள உருக்கம் என் மனத்தைக் கரைத்து விடும்.

''இந்த இசை அரசிக்கு முன்னால் நான் என்ன, வெறும் பிரதம மந்திரிதானே?'' என்று நேருஜி எம்.எஸ்.ஸைப் போற்றியதுண்டு. கம்பனோ, கவிச் சக்கரவர்த்தி. எனவே 'கவிச்சக்கரவர்த்தியின் சில பாடல்களை இசை அரசி பாடிப் பதிவு செய்ய வேண்டும்' என்ற அவா என்னுள் எழுந்தது.

சதாசிவம் அவர்களை அணுகினேன். அவர் தயங்கினார், தவிர்க்கக் கூட முயன்றார். காரணங்கள் இரண்டு. ஏற்கெனவே பாக்கி இருந்த பணிகளை முதலில் முடிக்க விரும்பினார். வயதுக் காலத்தில் புதிய பொறுப்புக்களை இழுத்து விட்டுக் கொள்ள யோசித்தார்.

நான் விடவில்லை. காஞ்சிப் பெரியவரிடம் போய், என் உள்ளக் கிடக்கையை வெளியிட்டேன். மகாபெரியவர் தமது சிரிப்பின் மூலம் அனுகிரஹம் செய்தார். ''நான் சொல்றேன்'' என்றும் சொன்னார். நான் கவலையை விட்டேன். எப்படியும் காரியம் நடந்து விடும் என்று நம்பிக்கை பெற்றேன்.

கம்பராமாயணத்தில் ராமனை இறைவனாகவே கண்டு சில கதாபாத்திரங்கள் துதிக்கும் பக்திப் பாடல்கள் உண்டு. அவற்றைத் தேர்ந்தெடுக்கலாம் என்று முடிவாயிற்று. காஞ்சி முனிவரே பொறுக்கி எடுத்துத் தருவதாகவும் இருந்தது. ஆனால் அவர் உடல்நலம் குன்றியதால், ''நீயே செய்து விடு'' என்று பணித்தார். முப்பத்தோரு பக்தி ரசப் பாடல்களையும் கடைசியில் பட்டாபிஷேகப் பாடலையும் சேர்த்து 32 பாடல்களைத் தேர்வு செய்தேன்.

சதாசிவம் - எம்.எஸ். தம்பதிக்கு ஏற்கெனவே ஒப்புக் கொண்டிருந்த பல அலுவல்கள் இருந்ததன் காரணமாகப் பாடல்களுக்கு இசை அமைக்கும் பணியும் பதிவு செய்யும் பணியும் தாமதமாகி வந்தன. சில ஆண்டுகளே சென்று மறைந்து விட்டன. இருந்தாலும் இடையிடையே அந்தத் தம்பதியைச் சந்தித்து நினைவூட்டி வந்தேன். பிறகு, இசை அமைத்துப் பாடல் பதிவு செய்யும் நேரங்களில் உடனிருக்கும் பாக்கியமும் எனக்குக் கிட்டியது. அப்போதுதான் எம்.

எஸ்ஸின் சிறப்பு இயல்புகள் பல எனக்குத் தெரியவந்தன.

ஒவ்வொரு பாடலுக்கும் பொருளை ஒருமுறைக்குப் பலமுறை கூறச் செய்தார். ஒவ்வொரு முறையும் பொருள் கூறும் போது புதிய புதிய நயங்கள் எனக்கே தோன்றும்! அவற்றைக் கேட்டறிந்தார். இதனால்தான் அவரால் பாடல்களை உணர்ச்சி வசப்பட்டுப் பாட முடிகிறது என்பது புரிந்தது. பாடல்களுக்கு இசை அமைத்த கடையநல்லூர் வேங்கடராமன், ஒலி நாடாவின் எடிட்டிங் போதும் உடனிருந்தார். நயம் கெடாமல், பாவத்துக்கு ஏற்ப இசை அமைத்தார். ''இப்படி இருக்கலாமே''; ''அப்படி அமையலாமே'' என்று எம்.எஸ்ஸும் அவரும் மாறி மாறிப் பேசிக் கொள்வதைப் பார்க்க, 'இந்தக் கலைஞர்கள் ஒருவரை ஒருவர் எப்படி மதித்து எப்படி பண்போடு பழகுகிறார்கள்' என்று எனக்கு ஆச்சர்யமாயிருக்கும். எச்.எம்.வி. நிறுவன இஞ்சினியரை, ''என்ன, கிருஷ்ணமூர்த்தி!'' என்றுதான் நான் அழைத்தேன்; ஆனால் எம்.எஸ்., ''இஞ்சினியர் ஸார்!'' என்று விளித்துத்தான் அவர் கவனத்தைக் கோருவார்! காலை பதினோரு மணிக்கு எச்.எம்.வி. ஸ்டூடியோவுக்கு வந்து விட்டால், அன்றைக்குப் பூர்த்தி செய்வது என்று தீர்மானிக்கப்பட்ட பாடல்கள் கச்சிதமாக ஒலி நாடாவில் பதிவாகச் சில சமயம் இரவு ஏழு மணி வரை கூட ஆகிவிடும். முழுத் திருப்தியாக அமைந்தாலொழிய எம்.எஸ். இல்லம் திரும்ப மாட்டார். 'ஏதோ பாட்டுப் போட்டுக் கேட்டு விடுகிறோம்; அதைப் பதிவு செய்வதில் எத்தனை நுணுக்கங்கள், எத்தனை முன்னேற்பாடுகள், எவ்வளவு சிரமங்கள்!' என்று எனக்குப் புரிய வந்தது.

**எ**ல்லாம் முடிந்த பிறகு முதல் கேஸட்டுடன் காஞ்சி முனிவரிடம்தான் சென்றேன். உடல் நலிவுற்ற நிலையிலும் மிகுந்த ஆர்வத்தோடு கேட்டார். கடைசியில் சொன்னார் : ''சுப்ரபாதம் பதிவு செய்து கொடுத்த போது இருந்ததை விட குரல் இன்னும் சிறப்பாயிருக்கு!'' ஆசி கூறி உயர்ந்தது அருட்கரம்.

அந்த ஆசி, எம்.எஸ். - சதாசிவம் தம்பதிக்கு மட்டுமின்றி, எச்.எம்.வி. நிறுவனத்துக்கும் இந்தக் காஸெட் ஒலிக்கப் போகிற லட்சக்கணக்கான குடும்பங்களுக்கும் உண்டு.

*(''கம்பன் கவி அமுது'' காஸெட் வெளியீட்டு விழாவில், நீதிபதி மாண்பமை மு. மு. இஸ்மாயில் பேசியதன் சுருக்கம்.)*





* அசாருதீன்

நூறாவது டெஸ்ட் என்று பேசப்பட்டது கல்கத்தா டெஸ்ட். இப்போது அசாரின் அற்புதமான ஆட்டத்துக்குப் புகழாரம் சூட்டப்படும் களமாகி விட்டிருக்கிறது!

தென்னாப்பிரிக்காவுடன் விளையாடும் போது ''அசாருதீன் காப்டன் பதவிக்கே லாயக்கில்லை!'' என்று பட்டோடி வெளிப்படையாகக் கண்டனம் தெரிவித்தார்.

''அது உண்மையாகவே இருக்கட்டும்; ஆனால் அதைப் பாதி டெஸ்ட் தொடரின் போது சொல்லி, விளையாட்டு வீரர்களின் மனநிலையையும் உற்சாகத்தையும் அவர் குலைக்க வேண்டுமா?'' என்று அசாருதீன் குமுறினார்.

''மனத்துக்குப் பட்டதைப் பளிச்சென்று சொல்லி விடும் பத்திரிகையாளன் நான். சமயம் வரட்டும் என்றெல்லாம் என்னால் காத்திருக்க முடியாது!'' என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லி விட்டார் பட்டோடி.

# சென்னை டெஸ்டும் அஸாரின் எதிர்காலமும்

ஆஸ்திரேலியாவிலும், தென்னாப்பிரிக்காவிலும் படு மோசமாக விளையாடிய இந்திய கிரிக்கெட் அணியின் மீது எழுந்த கோபத்தை எல்லாம், காப்டன் அசாருதீன் மீது காண்பித்த கிரிக்கெட் ரசிகர்களும், பத்திரிகையாளர்களும், கல்கத்தா ஈடன் கார்டன் அரங்கில் அசார் 182 ரன்களைக் குவித்ததும் சற்று அசந்துதான் போயிருக்கிறார்கள்.

இங்கிலாந்து அணியின் தலைவர் கூச் விளையாடும்

* கூச்



சக ஆட்டக்காரர்களைக் கட்டுப்படுத்தவோ, கண்டிக்கவோ அசாரால் முடிவதில்லை என்ற குற்றச்சாட்டும் ஒருபுறம் இருக்கிறது. அசார் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

இந்திய அணியின் ஆட்டம், தள்ளாட்டமாகிப் போனதற்கு அசார் மீது மட்டுமே குற்றம் சாட்டுவது எந்த அளவுக்கு நியாயம்?



* சௌகான்

சிதம்பரம் ஸ்டேடியத்தில் ஸ்ரீகாந்தைச் சந்தித்துக் கேட்டோம் :

''நான் அசாருதீனைக் குறை சொல்லவே மாட்டேன்!'' என்றார் ஸ்ரீகாந்த். அதற்குக் காரணம்?

''குதிரையைத் தண்ணீர்த் தொட்டிக்குத்தான் அழைத்துச் செல்ல முடியும். தண்ணீரைக் குடிக்க வைக்கவும் வேண்டுமென்றால் எப்படி? குழுவில் உள்ள விளையாட்டு வீரர்கள் சரியாக ஆடாவிட்டால் தலைவனைக் குற்றம் சொல்லுவதை என்னால் உண்மையில் ஏற்க முடியவில்லை.''

''திருத்தவோ கண்டிக்கவோ ஒரு காப்டனால் முடியாதா?''

''இது முழுக்க முழுக்க ஒரு டீம் விளையாட்டு. போலர்கள் துல்லியமாகப் பந்து வீசி விக்கெட்டுகளைச் சாய்க்க வேண்டும். பாட்ஸ்மென் கச்சிதமாக ஆடி ரன்களைக் குவிக்க வேண்டும். இது ஒழுங்காக நடந்து



* பிரபாகர்

விடும் பட்சத்தில் ஆட்டமும் வெற்றி பெறும். இந்த கல்கத்தா டெஸ்ட்டையே எடுத்துக் கொள்ளுங்கள். கணிசமான ஸ்கோர் எடுத்து, பாட்ஸ்மென் கை ஓங்க, மளமளவென்று விக்கெட்டுகளை வீழ்த்தி போலர்கள் உதவ, அசாருதீன் புகழ் 'ஓவர்நைட்'டில் உயர்ந்து விடவில்லையா? உடனே அவர் மிகச் சிறந்த காப்டன் என்று சொல்லி விட முடியுமா? அதனால்தான் சொல்லுகிறேன் - ஆட்டத்தின் போக்கை வைத்து காப்டன் திறமையானவரா இல்லையா என்று கணிப்பது சரியல்ல.''

''அப்படியானால் எப்போது ஒரு போலரை மாற்ற வேண்டும் என்று முடிவெடுப்பதெல்லாம் முக்கியமில்லையா?''

''முக்கியம்தான். அதற்கென்று சட்சட்டென்று மாற்றிக் கொண்டே இருக்க முடியாதே?''

* கும்ப்ளே



''இங்கிலாந்து அணியின் ஆட்டக்காரர்களில் யாருக்கு அதிகம் பயப்பட வேண்டியிருக்கும்?''

''கூச், கேட்டிங், ஸ்மித் மூவரையும்.''

''பந்து வீச்சாளர்களில்?''

''க்ரிஸ் ஓரயிஸ். ஜார்விஸ்.''

''சென்னை பிட்ச் பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன?''

''நமக்குச் சாதகமான பிட்ச்தான்!''

* பரத் ரெட்டி



**த**மிழ்நாடு கிரிக்கெட் அசோசியேஷன் செயலர் பரத் ரெட்டி, அசார் பற்றிச் சொல்லுவது நம் சிந்தனையைத் தூண்டியது.

''இந்திய அணியின் தோல்விகளுக்கு காப்டனைக் குற்றம் சொல்லுவது நியாயமில்லை என்றா சொல்கிறீர்கள்?''

* கபில்



''காப்டன்களை அடிக்கடி மாற்றுவதுதான் நமது அணியின் மோசமான ஆட்டத்துக்குக் காரணம் என்பேன்!'' என்று அடித்துச் சொல்லுகிறார் பரத் ரெட்டி. ''பத்து வருடங்களில் பத்து காப்டன்களைச் சந்தித்தால் எப்படி இருக்கும் ஒரு குழு?''

''மற்ற நாடுகளில் எப்படி?''

''பிற நாடுகளில் குறைந்தபட்சம் ஆறு, ஏழு வருடங்களுக்காவது ஒரு குழுவுக்குக் காப்டன் பதவி வகிக்கும் வாய்ப்பு ஒருவருக்குக் கிடைக்கிறதே! இங்கே ஆறு, ஏழு மாதங்களுக்குக் கூட ஒருவரைக் காப்டனாக இருக்க விடுவதில்லையே! யூனியன் தலைவர்களை, வசதிகள் பெற்றுத் தராவிட்டால் மாற்றுவது போல, மாற்றிக் கொண்டே இருந்தால் எப்படி?''

'எப்போது மாற்றப்படுவோமோ?' என்ற அச்சத்திலேயே தினம் தினம் விளையாடும் காப்டனுக்கு, என்ன முடிவுகள் எடுக்க முடியும்? தேர்வுக் குழுவில் உள்ளவர்களைத் திருப்திப்படுத்துவதிலேயே, அவரது கவனம் முழுதும் இருக்கும் பட்சத்தில், தமது குழுவைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்து, வழி நடத்தி, வெற்றிப் பாதையில் இட்டுச் செல்ல எங்கே அவகாசம் இருக்கப் போகிறது? என்பது பரத் ரெட்டியின் கணிப்பு. ஆட்ட நேரத்துக்கு அப்புறமும், மைதானத்துக்கு வெளியேயும் காப்டனுடைய பணி தொடர்கிறது என்பதை மறக்கக் கூடாது.

''இங்கிலாந்து அணியை அப்படி ஒன்றும் ஏப்பை சாப்பை என்று சொல்லி விட முடியாது. எல்லாரும் புரொஃபஷனல் ஆட்டக்காரர்கள். தங்கள் தரத்தை



● பட்டோடி



● காட்டிங்...



● ஸ்ரீகாந்த்

விடாமல் கடைப்பிடித்து வருகிறவர்கள்!'' என்கிறார் பரத் ரெட்டி.

அசாருதீன் தம் குழுவைத் துடிப்பான நிலையில் வைத்திருந்தால்தான் தொடர்ந்து வெற்றி காண முடியும் என்று எச்சரிப்பது போல் இருந்தது!

**ப**தினைந்து வருடங்களாகத் தொடர்ந்து கிரிக்கெட் டெஸ்ட் மாட்சுகளை ஸ்டேடியத்துக்கு வந்து கண்டுகளிக்கும் வழக்கம் உள்ள இளைஞர் மது. சென்னை ஸ்டேடியம் ஒரு 'போலர்ஸ் பிட்ச்' என்கிறார்.

''இந்தியாவிலேயே ஸ்பின் பிட்சம், பாட்டிங் பிட்சம்தானே இருக்கின்றன? சென்னை, நம் ஸ்பின் போலர்களுக்கு நிச்சயம் சாதகமாய் இருக்கும்... அசார் 50+ அடிக்கலாம்...'' என்றவர், ''கூச்சையும் ஃபேர் பிரதரையும்தான் கவனிக்க வேண்டும். அவர்களைச் சீக்கிரம் பெவிலியனுக்கு அனுப்பி விட்டால் அதிகம் கவலைப்பட வேண்டாம். ராஜு, கும்ப்ளே, சௌஹான் மூவருமே தங்கள் தங்கள் பங்குக்கான விக்கெட்டுகளை வீழ்த்தி விடுவார்கள். கபிலை விட, பிரபாகர் கூடுதலாக விக்கெட்டுகளை வீழ்த்துவார் என்று நான் நினைக்கிறேன்!''

பெங்களூரிலிருந்து வந்திருக்கும் பிஸினஸ் மேன் கிருஷ்ணராஜ் சொன்ன ஆருடம் :

''இது டெட் பிட்ச். நிச்சயம் ஆட்டம் டிராவில் தான் முடியும்!''

## அடுத்த இதழில்...

●● நாடக மேடைக்கு குட்பை சொல்வதேன்?

– 'சோ'வுடன் ஒரு சந்திப்பு



**பு**ள்ளிவிவரப் பிரியர்கள் மட்டும் மேற்கொண்டு படிக்கவும் :

● இதுவரை இந்தியாவில் பெங்களூர், பம்பாய், கல்கத்தா, தில்லி, கான்பூர், சென்னை ஆகிய இடங்களில் நடைபெற்ற 40 டெஸ்ட்களில், பத்து டெஸ்ட்டுகளில் இங்கிலாந்து வெற்றி பெற்றிருக்கிறது; இந்தியா எட்டு டெஸ்ட்டுகளில் மட்டுமே வென்றிருக்கிறது. மீதி இருபத்திரண்டு டெஸ்ட்டுகளும் 'டிரா'!

● இங்கிலாந்துக்குச் சென்று நம் குழு ஆடிய 38 டெஸ்ட்டுகளில், 21 டெஸ்ட்டுகளில் இங்கிலாந்து வென்றிருக்கிறது. நாம்

# திரு.வி.க. நகர் பெனி:பிட் :பண்டு லிமிடெட்

ஸ்தாபிதம் : 1989

தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் அருகில்),
சென்னை – 600 082. போன் : 610390
பாரீஸ் கிளை : 49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (கந்தசாமி கோயில் அருகில்),
சென்னை – 600 003. போன் : 565760

## டெபாசிட் திட்டங்கள்

### பென்ஷனர் டெபாசிட்

| குறைந்த பட்ச டெபாசிட் | காலம் | வட்டி விகிதம் |
|---|---|---|
| ரூ.10,000 | 1 வருடம்<br>2 வருடங்கள்<br>3 வருடங்கள் | 21% |

- ★ இத்திட்டத்தின் கீழ் ஓய்வு பெற்றோர், 50 வயது அடைந்தோர், விதவைகள், உடல் ஊன முற்றோர் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளை களும் பயன் பெறலாம்
- ★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்
- ★ வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

### வைப்பு நிதி

| காலம் | வட்டி விகிதம் | |
|---|---|---|
| | ரூ.10,000 க்கு கீழ் | ரூ.10,000 மும் அதற்கு மேலும் |
| 1 வருடம் | 17% | 18% |
| 2 வருடங்கள் | 18% | 19% |
| 3 வருடங்கள் | 19% | 20% |

- ★ குறைந்த பட்ச டெபாசிட் ரூ.1,000
- ★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்
- ★ குறைந்த பட்சம் ரூ.10,000 டெபாசிட் செய்தால் வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

### மறுமுதலீட்டுத் திட்டம்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.1,000 | 12 மாதங்கள் | 1,185 |
| | 24 மாதங்கள் | 1,430 |
| | 36 மாதங்கள் | 1,760 |
| | 44 மாதங்கள் | 2,000 |

### ஐஸ்வர்யா டெபாசிட்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.1,000 | 10 வருடங்கள் | 6,919 |
| | 15 வருடங்கள் | 18,885 |
| | 20 வருடங்கள் | 52,827 |
| | 23 வருடங்கள் | 95,760 |

- ★ மாதாந்திர சேமிப்புத் திட்டத்தில் பிரதி மாதம் ரூ.25 செலுத்தி 12 மாதங்கள் கழித்து ரூ.330 பெறுங்கள்.
- ★ சேமிப்புக் கணக்கில் உள்ள நிலுவை தொகைக்கு நாள் தோறும் 12% P.A. வட்டி வழங்கப்படும்.
- ★ நகையின் பேரில் ஒரு சவரனுக்கு ரூ.2,500 வரை கடன் வழங்கப்படும்.
- ★ வீட்டின் பேரிலும் கடன் வழங்கப்படும்.
- ★ பங்குதாரர்களுக்கு மட்டும் ★ ரூ.1 செலுத்தி ஒரு பங்கு பெற்றுக் கொள்ளுங்கள்.
- ★ இது சீட்டு நிறுவனம் அல்ல

Ideal/93

வேலை நேரம் :
தலைமை அலுவலகம் : காலை 9 முதல் 5 வரை. ஞாயிறுகளில் 9 முதல் 12.30 வரை. செவ்வாய் விடுமுறை.
பாரீஸ் கிளை காலை 10 முதல் 5 வரை. ஞாயிறு விடுமுறை.

✣ பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள் ✣

வென்றது மூன்றே மூன்று டெஸ்ட்களில்! பாக்கி பதினாலும் 'டிரா'.

● 84-85ல், சென்னையில் இங்கிலாந்து அதிகபட்ச ஸ்கோர் - 7 விக்கெட் இழப்புக்கு 652 (டிக்ளேர்ட்). நாமும் ஓவலில் 90ல், 606 எடுத்து டிக்ளேர் செய்திருக்கிறோம் - 9 விக்கெட்டுகள் இழந்து.

● குறைந்தபட்ச ஸ்கோர் இங்கிலாந்தைப் பொறுத்தவரை பம்பாயில் 81-82ல், 102; ஓவல் மைதானத்தில் 71ல், 101. இந்தியாவைப் பொறுத்தவரை 76-77 சென்னை டெஸ்ட்டில் எடுத்த 83ம், 74ல் லார்ட்ஸ் மைதானத்தில் எடுத்த பரிதாபகரமான 42ம்!

● கேட்டிங்கும், ஜார்விஸ்லோம் முன்பு தென்னாப்பிரிக்காவுக்கு, நிர்வாகத்தை எதிர்த்துக் கொண்டு, டூர் போனார்கள். அப்புறம் சஸ்பெண்ட் செய்யப்பட்டது நினைவிருக்கலாம். தென்னாப்பிரிக்காவுடன் ஆட பின்னால் தடை நீக்கப்பட்டதும் சஸ்பென்ஷன் உத்தரவும் வாபஸ் பெறப்பட்டது.

● அலெக் ஸ்டீவர்ட்டின் தகப்பனார், இங்கிலாந்து டீமின் மானேஜராய் இருந்தவர். அதனால்தான் அவருக்கு டீமில் இடம் கிடைத்தது என்ற கிசு கிசு இங்கிலாந்தில் எழவில்லை. இங்கே சும்மா விடுவார்களா! பேசுகிறார்கள்!

● இயான் சாலிஸ்பரி 17 ஆவது மனிதன். ஒரிஜினல் ஸ்குவாடில் இவர் பெயரே இருக்கவில்லையாம். ஆனாலும் விளையாடுகிற டீமில் இவர் இருக்கிறார்! 'கிசுக்'கென்று அப்படி ஒரு முன்னேற்றம்!

"இங்கிலாந்துடன் ஆடும் இந்தத் தொடரில் இந்தியா நிச்சயம் வெற்றி பெறும்!" என்றார் ஒரு தீவிர கிரிக்கெட் ரசிகர்.

"எப்படி?"

"அசார் முகத்தை டீவியில் பார்த்தீர்களா? அவர் முகத்தில் ஏதும் வித்தியாசம் தெரிந்ததா?"

"கவனிக்கவில்லையே?"

"அடுத்த முறை கவனியுங்கள். மீசை வளர்த்திருக்கிறார். அப்படி வளர்த்த முதல் கல்கத்தா டெஸ்ட்டில் வெளுவெளுவென்று வெளுத்திருக்கிறார் பார்த்தீர்களா? அசாருக்கு மீசை அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது!"

– சாருகேசி

படங்கள் : சாரி

அட்டை வண்ணப்படங்கள் :
பிரதீப் மந்தானி

## வானதி வழங்கும் புதிய நாவல்கள், சிறுகதைகள்

| | விலை ரூ. பை. |
|---|---|
| ● **கோவி. மணிசேகரன்** | |
| குற்றாலக் குறிஞ்சி (1993 சாகித்திய அகாதமி பரிசு பெற்ற சரித்திர நாவல்) | 30.00 |
| சேர சூரியன் | 40.00 |
| ● **விக்கிரமன்** | |
| சித்திர வல்லி (சரித்திர நாவல்) | 32.00 |
| ● **எஸ்.எல். லட்சுமிசுப்பிரமணியம்** | |
| புவனமோகினி (சரித்திர நாவல்) | 38.00 |
| ● **பி.வி.ஆர்.** | |
| உன்னைச் சுற்றி ஒரு சொர்க்கம் | 40.00 |
| அதிர்ஷ்ட தேவதை | 27.00 |
| நதிக்கு ஒரு கரைதான் | 28.00 |
| ● **இந்திரா சௌந்தர்ராஜன்** | |
| ஐந்து வழி மூன்று வாசல் | 40.00 |
| தூங்காத தர்மங்கள் | 20.00 |
| அம்மா என்றால் அன்பு | 25.00 |
| காதல் யுத்தம் | 20.00 |
| ● **துறைவன்** | |
| கல்லின் கருணை | 22.00 |
| ● **சியாமளாராவ்** | |
| ஜீவநதிகள் (மங்கையர் மலர் பரிசு பெற்ற நாவல்) | 20.00 |
| ● **சரஸ்வதி ராம்நாத் (தமிழில்)** | |
| மகா நந்தா (மராட்டிய நாவல், தமிழில் மொழிபெயர்க்க பெற்ற மிகச் சிறந்த நூல்) | 20.00 |
| நந்தினி (சாகித்ய அகாடமி பரிசு பெற்ற நாவல்) | 20.00 |
| ● **நீல.பத்மநாபன்** | |
| தலைமுறைகள் (நாவல்) | 57.00 |
| பாவம் செய்யாதவர்கள் (சிறுகதைகள்) | 17.00 |
| ● **உமா சந்திரன்** | |
| அன்புச் சூழல் (சமூக நாவல்) | 65.00 |

| | விலை ரூ. பை. |
|---|---|
| ● **கல்கி** | |
| பொய்மான் கரடு | 18.00 |
| அலை ஓசை (சாகித்ய அகாடமி பரிசு பெற்ற நாவல்) | 135.00 |
| ● **தொகுப்பாசிரியர் : மகரம்** | |
| வானதியின் சிறப்புச் சிறுகதைகள் (நான்கு பாகங்கள்) (101 மிகச் சிறந்த ஆசிரியர்கள் எழுதிய சிறுகதை தொகுப்பு.) | 160.00 |
| ● **கௌதம நீலாம்பரம்** | |
| ராஜபீடம் (சிறுகதைகள்) | 28.00 |
| ● **சு. சமுத்திரம்** | |
| (சிறுகதைகள்) | |
| மனம் கொத்தி மனிதர்கள் | 30.00 |
| இன்னொரு உரிமை | 27.00 |
| அவளுக்காக | 14.00 |
| ● **மீ. ப. சோமு** | |
| நந்தவனம் | 65.00 |
| சீதாமணி | 17.00 |
| ● **லா. ச. ராமாமிர்தம்** | |
| (சிறுகதைகள்) | |
| பச்சைக் கனவு | 25.00 |
| அபிதா | 15.00 |
| இதழ்கள் | 20.00 |
| ஜனனி | 27.00 |
| உத்தராயணம் | 20.00 |
| மீனோட்டம் | 18.00 |
| என் பிரியமுள்ள சிநேகிதனுக்கு | 34.00 |
| ● **அய்க்கண் (நாவல்)** | |
| மண்ணின் மலர்கள் | 22.00 |
| ● **இலக்கிய சிந்தனை** | |
| (பரிசு பெற்ற கதைகள்) | |
| வெறுங்காவல் | 18.00 |
| வேரில் துடிக்கும் உயிர்கள் | 17.00 |

● தேவையான புத்தகங்களை VPP யில் பெற கடிதம் எழுதுங்கள்.
VPP தபால் செலவு தனி.

● வானதி ஷோரூமுக்கு விஜயம் செய்தால் ஆயிரக்கணக்கான நூல்களை நேரில் பார்த்து வாங்கலாம்.

● பள்ளி - கல்லூரி நூலகங்களுக்கு தக்க கழிவு உண்டு.

விவரங்களுக்கு :

# வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு,
தி. நகர் தலைமை தபால் நிலையம் எதிரில்,
தி. நகர், சென்னை - 600 017.
போன் : 442810

# மாட்டு வண்டி தொடங்கி நாட்டு வளர்ச்சி வரை!

கூட்டை மாட்டு வண்டியிலே ஆரம்பமாகிறது நாச்சி முத்து கவுண்டரின் வாழ்க்கை. வால்பாறை எஸ்டேட்களிலிருந்து பொள்ளாச்சி சந்தைக்குச் சரக்குகள் கொண்டு வர மாட்டு வண்டி ஓட்டிச் சம்பாதித்தார். ஏதோ சாப்பாட்டுக்கு வருகிறது என்று அவர் திருப்தி அடைந்து விடவில்லை. நாலு, ஐந்து, பத்து என்று பொதி மாடு வண்டிகளை வாடகைக்குப் பெற்று ஓட்டினார்.

அத்துடன் நின்றாரா? ''ஒரு பஸ் வாங்கி ஓட்டினால் என்ன?'' என்று எண்ணினார். மாட்டு வண்டி யுகம் மாறி பெட்ரோல் வாகன யுகம் வருகிறது என்று புரிந்து கொண்டு அதற்கு வரவேற்புச் சொன்னார். இன்னும் இருவரைப் பங்குதாரராக்கிக் கொண்டார் நாச்சிமுத்து. ஒரு பஸ் நாளடைவில் பதினாலு பஸ்களாக அதிகரித்தன. ஆனைமலை பஸ் டிரான்ஸ்போர்ட் (ABT) என்ற நிறுவனம் வேகமாக வளர்ச்சி பெற்றது.

● நாச்சிமுத்து கவுண்டர்



ஆக, சிறு தொழில் தொடங்குவது, வேலை வாய்ப்புக்களைப் பெருக்கும் நோக்கில் அதைப் படிப்படியாக வளர்த்து, நவீன தொழில் நுட்பங்களை வரவேற்றுப் புகுத்தி, மூலதனத்தை அதிகரித்து, விரிவாக்கம் செய்து, பல துறைகளில் கிளை விட்டுப் படர்வது என்று நாச்சிமுத்து கவுண்டர், இன்றுள்ள பல தொழில் ஆர்வலர்களுக்கு வழிகாட்டியாக விளங்குகிறார். இப்படி ஏராளமான பேர் நாட்டில் பெருகும் போது தான் பொருளாதாரச் செழிப்பு உண்டாகிறது.

சேர்த்த செல்வத்தைத் தமதாகவே முற்றிலும் கருதாமல் சமுதாயப் பணிகளுக்கும் செலவு செய்தார் நாச்சிமுத்து கவுண்டர். அறக்கட்டளை நிறுவி, ஏழைக் குழந்தைகள் கல்வி பெற உதவினார். அவர் ஒரு சக்தி உபாசகர் மட்டுமல்ல, தேசபக்தர். அதனால் மாரியம்மன் கோயிலைப் புதுப்பித்ததுடன் ஹரிஜனங்களுக்கும் கோயிலைத் திறந்து விட்டார். பலியிடும் பழக்கத்துக்கு முற்றுப் புள்ளி வைத்தார். நகரமன்றத் தலைவராகவும் விளங்கி, பொள்ளாச்சி நகரமெங்கும் மின் விளக்குகள் சுடர் விட வழிவகுத்தார். இவை எல்லாமே அவரது தேசபக்தியின் பல்வேறு வடிவங்கள்.

எல்லாம் சரி, யார் இந்த நாச்சிமுத்து கவுண்டர்? பொள்ளாச்சி, கோவை வட்டாரத்துக்கு அப்பால் வாழும் இன்றைய தலைமுறையினருக்கு ஒருவேளை தெரிந்திராது. சக்தி குரூப் நிறுவனங்களின் தலைவர் அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்களின் தந்தையார்தான் இந்த நாச்சிமுத்து கவுண்டர்! அவர் நட்ட விதைதான் இன்று ஆல் போல் தழைத்து, ''சக்தி'' என்ற பொதுப் பெயரில் சர்க்கரை ஆலையாகவும், நிதி நிறுவனமாகவும், சோயா எண்ணெய் ஆலையாகவும், நெசவாலையாகவும் இன்னும் எத்தனையோ பல நிறுவனங்களாகவும் விழுது விட்டுப் படர்ந்துள்ளது. ஒரிஸ்ஸா, கர்நாடகா, கேரளம் என்று வேறு மாநிலங்களிலும் சக்தி நிறுவனங்கள் விவசாயம் தொடர்பான தொழில் வளர்ச்சிக்கு உதவி வருகின்றன. மருத்துவமனைகள், கல்வி நிறுவனங்கள் என்று ஏராளமான சமுதாயப் பணிகளும் நடக்கின்றன.

பொள்ளாச்சியில் நாச்சிமுத்து பெயரால் ஒரு பாலிடெக்னிக், ஏராள தொழில் ஆர்வலர்களை ஆண்டுதோறும் தயாரித்து அளிக்கிறது. அதன் ஆசிரியர்களும் மாணவர்களும் சமீபத்தில் ஸ்தாபகர் தினத்தை மிகவும் ஆர்வத்துடன் கொண்டாடினார்கள். மத்திய அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலம், கோவை போலீஸ் கமிஷனர் கணேசன் முதலியோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

நாச்சிமுத்து கவுண்டரின் ஒரு கம்பீரச் சிலை தவிர, பாலிடெக்னிக் வளாகத்தில் ஒரு பழங்கால ரயில் இஞ்சினும் கவனத்தைக் கவர்கிறது. அதே நேரத்தில் அதிநவீன தொழில் நுட்பங்களை மாணவர்கள் நேரடியாகக் கற்றுணர்கிறார்கள். வாசலுக்கு நேரே தோட்டத்தில் அலங்கார மையமாக அசோக ஸ்தூபியின் சிங்கச் சிற்பங்கள். பாரம்பரியத்தில் உறுதியாக நின்று, தேச பக்தியுடன் நிகழ்காலத்தில் வாழ்ந்து, எதிர் காலத்தையும் திட்டமிடும் மாணவ மணிகள் உருவாகி வருவதையே இவை உணர்த்துகின்றன.

– கி. ராஜேந்திரன்

# பரிசு ரூ. 250

## திணறடிக்கும் தலைவர்கள்

இங்கே பகுதியளவு மட்டும் தலையைக் காட்டித் திணறடிக்கும் அரசியல் தலைவர்கள் யார் யார்? அவர்களைக் கார்ட்டுன் போட்ட பிரபல ஓவியர்கள் நால்வர் யார்? விடைகளை வரிசைப்படி எழுதி உங்கள் பெயர், விலாசத்துடன் கல்கி அலுவலகத்துக்குக் கத்திரித்து அனுப்புங்கள்.

கடைசித் தேதி : 24.2.93

உறை மீது 'திணறடிக்கும் தலைவர்கள்' என்று கட்டாயம் குறிப்பிட வேண்டும்.

எல்லா விடைகளையும் சரியாக எழுதும் ஒருவருக்கு ரூ 250 பரிசு. ஒருவருக்கு மேல் சரியான விடைகள் எழுதினால் பரிசு சமமாகப் பகிர்ந்து அளிக்கப்படும். பத்துப் பேருக்கு மேல் சரியான விடைகள் எழுதினால் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் பத்து வாசகர்களுக்குப் பரிசுத் தொகை சமமாகப் பகிர்ந்தளிக்கப்படும்.

1


2


3


4


5


6


ஓவியர்கள் : 1.................... 2.................... 3.................... 4....................

தலைவர்கள் : 1.............................2.............................3.............................

4.............................5.............................6.............................

என் பெயர் : ..........................................................................

விலாசம் : ..........................................................................

..........................................................................


அர்ஜுன் சிங்
மத சார்பற்ற
கட்சிக்குள் பிரதமருக்கு எதிர்ப்பு
நரசிம்ம ராவ்
எல்லாரும் ரோஜா மலரைத்தான் பெரிசா வளர்ப்பாங்க... நாம் என் தலைமையிலேயே, நீ முள்ளை பெரிசாக்கித் தொலைச்சிருக்கே...
பொறாமை கொண்டவர்கள், எரிச்சல் மட்டுமின்றி வயிற்றெரிச்சல் கொண்டவர்கள் இல்லாததும், பொல்லாததும் சொல்கிறார்கள்... எதிரிகள் நம்மைப் பார்த்து ஏளனம் பேசினாலும், ஏகடியம் பேசினாலும் இழித்தும் பேசினாலும் ......
சமாதியிலே கூட மனுஷனுக்கு நிம்மதி கிடையாதா...
அண்ணா சமாதி
நெடுஞ்செழியன்
அப்படியே பிசுபிசுத்துப் போயிட்டா நல்லா இருக்கும்!...
பிரதமர் பதவி



கல்கி



1993
பிப்ரவரி 14
மலர் : 51
இதழ் : 29
ஆங்கீரச
மாசி 3

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. -பாரதியார்.

# நாடும் நக்ஸலைட்டுகளும்...

நக்ஸலைட்டுகளால் பிணைக் கைதியாக்கப்பட்ட பாலராஜு ''மனிதரல்ல, கடவுள்'' என்று போற்றப்படும் அளவுக்கு உயர்ந்து விட்டிருக்கிறார்! தம்முடன் சேர்ந்து பிணைக் கைதிகளாக்கப்பட்ட ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரியையும் பிறரையும் விடுவித்து விடுமாறு நக்ஸலைட்டுகளுக்கு இவர் கோரிக்கை விடுத்தாராம். ''நான் ஒருவன் போதாதா?'' என்று கேட்டாராம். அதன்படி தாசரி ஸ்ரீனிவாசலுவும் வேறு சிலரும் விடுவிக்கப்பட்டனர். ஆயினும் பத்து பிணைக் கைதிகளில் இன்னும் ஆறு பேர் நக்ஸல்கள் வசம். சிறை வைக்கப்பட்டுள்ள தங்கள் சகாக்கள் சிலரது விடுதலையைக் கோரித்தான் நக்ஸலைட்டுகள் பிணைக் கைதிகளைக் கடத்திச் சென்று, 'கொன்று விடுவோம்' என்றும் பயமுறுத்துகின்றனர்.

இந்த இதழ் நேயர்களின் கரங்களுக்கு வந்து சேருமுன்னர் நிலைமையில் முன்னேற்றமோ பின்னடைவோ ஏற்பட்டிருக்கும். நக்ஸல்களுக்கு விட்டுக் கொடுத்து பாலராஜு காப்பாற்றப்பட்டிருக்கலாம். அல்லது, உறுதியாக இருந்து அவரை நாம் இழக்கவும் செய்யலாம். அதிர்ஷ்டமிருந்தால் அதிரடிப் படை நக்ஸல்களிடமிருந்து பாலராஜுவை மீட்டுக் கொண்டும் வந்து சேரலாம். ஆனால் இதனால் அடிப்படைப் பிரச்னை தீரப் போவதில்லை. பாலராஜுவுக்குப் பதில் நாளை ஒரு சந்திரராஜுவோ, கிருஷ்ணராஜுவோ நக்ஸலைட்டுகளிடம் பிணைக் கைதியாகச் சிக்கிக் கொள்ளப் போகிறார். மறுபடி நிபந்தனைகள்; பத்திரிகைகளுக்குப் பரபரப்பான செய்திகள். எனவே நாம், இன்றைய ஒரு சாணக்கியத்துடன் நின்று விடாமல் நாளைய ஒரு சாதனைக்கும் வழிவகுக்க வேண்டும்.

வன்முறை, பயங்கரவாதம் என்பதெல்லாம் இந்தியாவில் பலவித வடிவங்களை எடுக்கிறது. பிரிவினைவாதம் வன்முறையைத் தூண்டுகிறது; மத வேறுபாடுகள் துவேஷத்தை வளர்த்து, வன்முறையைக் கொழுந்து விட்டு எரியச் செய்கிறது; வறுமை, வன்முறைக்கு வித்திடுகிறது. 'ஆயுதப் புரட்சி மூலம்தான் இந்த நாட்டில் மக்கள் துயர் தீரும்' என்று இளைஞர்கள் பலர் நம்பும்படி ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தியவர்கள் யார்? சந்தேகமில்லாமல் 45 ஆண்டுகளாக நம்மை ஆண்டு வந்திருப்பவர்கள்தாம்!

செய்வதற்கு வேலையிருந்தால், கைநிறையக் கூலி கிடைத்தால், வயிறும் நிரம்பியிருந்தால் யாரும் புரட்சி, வன்முறை என்று சிந்திக்கவோ, பேசவோ மாட்டார்கள். எந்த ஒரு மனோதத்துவ நிபுணரிடம் கேட்டுப் பார்த்தாலும் இந்த விடை கிடைக்கும். ஆனால் நடந்தது என்ன? நாடு சுதந்திரம் பெற்று 45 ஆண்டுகள் ஆகியும் வறுமையும் வறட்சியும் மக்களை வாட்டி வதைக்கின்றன. வேலையில்லாத் திண்டாட்டம் வேதனைப்படுத்துகிறது. கைகள் செயலற்றுப் போகும் போது, மூளை குயுக்தியாகச் சிந்திக்கத் தொடங்குகிறது. வன்முறை என்கிற பழிவாங்கல் சித்தாந்தம், உள்ளத்துக்குள் பூதாகார வடிவமெடுத்து ஆளை அப்படியே வசப்படுத்தி விடுகிறது.

நமது தலைவர்கள் அடிப்படையான இரண்டு தவறுகளைச் செய்தார்கள். சுதந்திரம் பெற்ற கையோடு ''சோஷலிஸ சித்தாந்தம்'' என்று கூறிக் கொண்டு, மனித முயற்சியின் குரல் வளையைப் பிடித்து நெரித்தார்கள். எல்லாவற்றையும் அரசுடைமையாக்குவது, அல்லது அரசுக் கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருப்பது என்று திட்டமிட்டுச் செயல்பட்டார்கள். இதனால் லஞ்ச லாவண்யம் பெருகியதே தவிர, உற்பத்தியோ வேலை வாய்ப்போ பெருகவில்லை. இப்போதுதான் மத்திய அரசு விழித்துக் கொண்டு, நரசிம்மராவ் ஆட்சியில் புதிய பொருளாதாரக் கொள்கையைப் புகுத்தியிருக்கிறது. இதிலும் மாநில அரசுகள் முழு ஒத்துழைப்புத் தரவில்லை. அவை இன்னமும் தொழில் துறையைக் கட்டுப்பாட்டில் வைத்து, கட்சிக்கும் சொந்தத்துக்கும் பணம் பண்ணுவதிலேயே கண்ணாயிருக்கின்றன.

இரண்டாவது பெரிய குற்றம், கல்விக்குப் போதிய முக்கியத்துவம் தராமல் இருந்து விட்டதாகும். இந்தப் பரிதாப நிலை இன்றைக்கும் தொடர்கிறது. நமது தேசத்தின் வளர்ச்சிக்குத் தேவையான விதத்தில் நன்கு திட்டமிட்டு, சிறந்த கல்விக் கொள்கை வகுத்து, அதை நாடு முழுவதும் ஒருவர் பாக்கியின்றி அனைவருக்கும் கிடைக்குமாறு செய்தே ஆக வேண்டும். கல்வி அளிப்பது போலவே எந்த வகையான கல்வி என்பதும் முக்கியம். இதற்கு எத்தனை கோடி செலவானாலும் பாதகமில்லை. இதில் செலவாகும் சில கோடிகள் பல கோடி ரூபாய்களை அள்ளித் தரும். இதர பல இனங்களில் விரயமாகும் கோடிகளோ, கேடிகளையே உருவாக்கிக் கொண்டிருக்கின்றன!

அன்புள்ள
அலமு அத்தை,



ஹாய்!

உன் லெட்டரைப் படிச்சுட்டு பப்லுவோட ராத்திரி மொட்டை மாடிக்குப் போனேன். அவன் உடனே 'ட்விங்கிள் ட்விங்கிள்' பாட ஆரம்பிச்சுட்டா! நிறுத்தச் சொல்றதுக்குள்ள ரொம்பக் கஷ்டமாப் போச்சு!

'வானத்துல இருக்கற எத்தனையோ வெளிச்சப் புள்ளிகளெல்லாம் சுத்திக்கிட்டேயிருக்கு. நம்ம உலகம் கூட பம்பரம் மாதிரி சுத்திக்கிட்டிருக்கு - அத்தை லெட்டர்ல எழுதியிருக்காங்க'ன்னு சொன்னேன்.

'ஹையா! அப்படின்னா நாம பம்பரத்து மேலே வீடு கட்டிக்கிட்டு இருக்கோமா?'ன்னு கேட்டா. அப்புறம், 'நம்ம உலகத்தை யாரு சுத்தி விட்டிருப்பாங்க?'ன்னு எங்களுக்கு யோசனை வந்துடுச்சு... எவ்ளோ பெரிய சாட்டை வேணும்!

அப்பாவும் அம்மாவும் மொட்டை மாடிக்கு வந்தப்போ அவங்ககிட்டே கேட்டோம். 'பம்பரம் மாதிரி உலகத்தைச் சுத்தி விட மனுஷங்களால முடியுமா...? முடியவே முடியாது'ன்னார் அப்பா.

தீபாவளிக்கு ஆட்டம்பாம் வெடிக்கிறோமே, அதைவிட ரொம்ப ரொம்ப, ரொம்பப் பெரிசா ஒரு வெடிச் சத்தம் அண்டவெளியில கேட்டுதாம். அப்பத்தான் நட்சத்திர மண்டலங்கள் ஏற்பட்டதாம். அப்புறம் ஐந்நூறு கோடி வருஷங்களுக்கு முன்னால அண்டத்துல மிதந்துக்கிட்டிருந்த வாயு, தூசியெல்லாம் சேர்ந்து உருண்டை உருண்டையா சூரியனாவும் பூமியாவும் மற்ற கிரகங்களாகவும் மாறித்தாம். அப்போலேர்ந்து எல்லாம் சுத்திக்கிட்டேதான் இருக்கு - 460 கோடி வருஷங்களா சுத்திக்கிட்டிருக்கு! பூமி பம்பரம் மாதிரி தன்னைத்தானே சுத்திக்கிறதோட சூரியனையும் சுற்றிச் சுற்றி வருதாம்! அது மட்டுமில்லே, ஒவ்வொரு நட்சத்திரமும் ஒரு சூரியனாம். ரொம்ப ரொம்ப தூரத்தில இருக்கிறதால சின்னதாத் தெரியுதாம். ஒவ்வொரு சூரியனைச் சுத்தியும் நம்ம பூமி மாதிரி பல பூமிகள் சுத்தி வருதாம்!

அப்பா எங்களை அடுத்த ஞாயித்துக் கிழமை கோட்டூர்ல இருக்கற Birla Planetarium க்கு அழைச்சுக்கிட்டுப் போகப் போறார். அங்கே உலகம் எப்படி உருவாச்சுன்னு இன்னும் அழகாச் சொல்லுவாங்க. நீ மெட்ராஸ் வரும் போது உன்னையும் Birla Planetarium பார்க்க அழைச்சுட்டுப் போவேன்.

அன்பு கண்மணி,

அருண்


KERA

## 17

**ப**ச்சை வெல்வெட் அட்டை போட்ட புகைப்பட ஆல்பம். பல பேர் புரட்டியதில் கசங்கி விட்ட வெண்ணெய்க் காகிதம். திறந்ததும் முதல் பக்கம் கல்கத்தாவின் வெற்றிக் கோப்பை. ஒற்றை விரல் தூக்கி எச்சரிக்கும் சிவாஜி. அடுத்தடுத்த படங்களில் காட்டப்படும் நவரசங்கள். காற்றில் லக்ஷ்மிநாராயணன் டைவ் அடிக்கிறான். இதோ சிலம்புச் சண்டை. இது மான் கொம்பு. மோகனாம்பாளின் நாதஸ்வரம். நெற்றியில் நரை புரளும் திரிசூலம். கடித்த உதட்டில் முதுகில் பட்ட சாட்டையடி. ஆல்பத்தின் அடுத்த பக்கம் மெல்ல நகர்கிறது. கை கட்டி எதிர்பார்ப்பில் லக்ஷ்மிநாராயணன் மேலே தொடர்கிறான்.

''சிபிச் சக்ரவர்த்தி மடியிலே புறா வந்து விழுந்த மாதிரி உங்ககிட்டே நம்பி வந்திருக்கேன் சார். கவர்ன்மெண்ட் உத்தியோகம். நல்ல சம்பளம். அஞ்சு மணிக்கு வீட்டுக்கு வந்து, பொழுதெல்லாம் டீ.வி. பார்த்துட்டுருக்கலாம் சார். என்னால இருக்க முடியல. கல்கத்தாவிலே என் நடிப்புக்கு பாஷையே தெரியாம கைத்தட்டி வாங்க சார். காதுகிட்டே கேப் வெடிச்ச மாதிரி அந்த இரைச்சல் கேட்டுக்கிட்டேயிருக்கு. ஒரு நிமிஷம் ஓர் இடத்துலே நிம்மதியா உட்கார விடாம உள்ளுக்குள்ள முயற்சி செய்யி, செய்யின்னு எதுவோ ஒண்ணு சொல்லிக்கிட்டேயிருக்கு சார். கல்யாணமாகி, குடும்பஸ்தன். காலிலே இரும்புக் குண்டையும் இழுத்துக்கிட்டு ஓடிட்டேயிருக்கேன். நீங்கதான் மனசு வைக்கணும் சார்.''

''அடேங்கப்பா. விட்டா டயலாக்கே எழுதுவே போலிருக்கு?''

''அசந்தா அதையும் செய்யலாம் சார். அது முக்கியமில்ல. எப்படியாவது நடிக்கணும். வெளையாட்டில்லே சார். ரெண்டு மாசமா ஆபீஸ் போகல்லே. ஜெயிக்கணும்னு ஒரு வைராக்கியம். நான் யார்னு எல்லோருக்கும் கையில சங்கு, சக்கரத்தோட விஸ்வரூபமெடுத்துக் காட்டணும். ஒரு படம் சார். ஒரே படம். நான் நெனைக்கிற மாதிரி வாய்ப்பு அமைஞ்சிட்டா தமிழ்நாட்டிலே நானும் ஒரு ஆளு சார். பெரிய காமெடியனா வருவேன். என் வாழ்க்கையை டிராஜிடியா முடிச்சிறாதீங்க.''

''பார்க்கலாம்.''

வெண்ணெய் பேப்பர் வழுக்கிக் கொண்டு அடுத்த பக்கம் திரும்புகிறது.

''அப்படி சொல்லக் கூடாது சார். செய்யிறேன்னு சொல்லுங்க. இதோ பாருங்க.''

சர்வர் சுந்தரத்தில் வெவ்வேறு விதமாய் நாகேஷ் நடந்த வகைகளை லக்ஷ்மிநாராயணன் செய்து காட்டுகிறான்.

''நாரீமணியே...''

கொஞ்சம் போல் நவராத்திரி நாடகம்.

''பார்த்தேன் சுசீலா, பார்த்தேன். என் அன்புச் சிலை, அழகுக் கோமேதகம், அடித்துத் துன்புறுத்தப்பட்ட அந்தக் காட்சியைப் பார்த்தேன் சுசீலா, பார்த்தேன்.''

தூணில் கைவைத்து முகம் புதைத்து எம்.ஜி.ஆர். அழுகிறார். டைரக்டர் ஆகஸ்ட், செப்டம்பரில் வந்து பார்க்கச் சொல்லுகிறார். பச்சை வெல்வெட் அட்டை போட்ட புகைப்பட ஆல்பம் சைக்கிள் கேரியரில் வீடு திரும்புகிறது.

# பாப்கார்ன் கனவுகள்

**தெ**ருக் கதவு சைக்கிள் மோதித் திறக்கிறது. சப்தம் கேட்டு லக்ஷ்மிநாராயணனின் இரண்டரை வயது மகன் ஓடி வருகிறான். சிரித்துக் கொண்டே விஜயலக்ஷ்மி பின் தொடர்கிறாள். நீட்டிய பிஞ்சுக் கையில் லக்ஷ்மிநாராயணன் சிறிய வயதில் தான் மிகவும் ஆசைப்பட்ட அழகிய கிடார் பொம்மை கொடுக்கிறான். மகிழ்ச்சியைத் தோளில் மாட்டி ட்ரொய்ங், ட்ரொய்ங் என்று குழந்தை வாசல் கதவில் டான்ஸ் ஆடுகிறது. எதிர் வீட்டில் மாமனார் தலையில் அடித்துக் கொள்கிறார். விஜயலக்ஷ்மியைத் திரும்பி நிற்கச் சொல்லி, லக்ஷ்மிநாராயணன் அவள் தலையில் மல்லிகை சூட்டுகிறான்.

''வரும் போது லிங்கிச் செட்டித் தெரு போனேளா?''

''அடிப்பாவி. எப்படிக் கண்டு பிடிச்சே?''

சிரித்துக் கொண்டே விஜயலக்ஷ்மி பதில் சொல்லுகிறாள்.

''உங்களை எனக்குத் தெரியாதா?''

**ச**மையலறையில் இரவு உணவு முடிகிறது.

''இதுல ஒரு கையெழுத்துப்

ம.வே.சிவகுமார்

போடுங்கோ.''

''என்னது?''

''அப்ளிகேஷன். உங்க பிள்ளையைப் பள்ளிக்கூடத்துலே சேர்க்கறதுக்கு.''

''சீச்சீ. அவன் சின்னக் குழந்தை.''

''பரவாயில்லே. ஸ்கூல் போகட்டும். உங்களை மாதிரியே அவன் விஷமம் தாங்கலே.''

''விஜயலக்ஷ்மி.''

''உம்...''

''அவனைச் சீக்கிரம் தூங்க வைக்கறியா?''

''அது ஒண்ணும் வேணாம். நீங்க தூங்குங்கோ. கார்த்தாலே ஸ்கூல்ல உங்களுக்கு பேரண்ட்ஸ் இண்டர்வியூ.''

முன்பக்கம் கூரைவேய்ந்த வில்லிவாக்கம் பள்ளிக்கூடம். கடு கடு என்று கண்ணாடி அணிந்த மதர் சுப்பீரியர். ஜப்பானின் தலைநகரம் என்ன? தற்போதைய அமெரிக்க ஜனாதிபதி யார்? லக்ஷ்மிநாராயணன் கையெடுத்துக் கும்பிடுகிறான். தயவு செய்து கேள்விகள் போதும். மூன்று வருடங்களாக அவன் பேப்பரே படிக்கிறதில்லை. பல்வேறு நாடுகளின் தலைநகரங்கள் மாறியிருப்பது அவனுக்குத் தெரியாது. டொனேஷன் தொகை எங்கே கட்ட வேண்டும்? ஐநூறு ரூபாய் அதிகம் கட்டுவதற்கு அவன் சம்மதிக்கிறான். ஒரு வேண்டுகோள். பரீட்சையில் அவன் பெயில் என்கிற விவரம் மட்டும் வெளியே யாரிடமும் சொல்ல வேண்டாம்.

''அதுக்கு அவசியமே இல்லே மாப்பிள்ளே.''

கிளைமாக்ஸில் கோர்டனில் ஒலிக்கிற கதாநாயகன் குரல் போல் ஒலித்த மாமனார் குரலில் திடுக்கிட்டு, லக்ஷ்மிநாராயணன் திரும்புகிறான். ஓய்வு நாட்களில் பொழுது போகாமல் மாமனார் அதே பள்ளிக்கூடத்தில் வேலைக்குச் சேர்ந்திருக்கிறார்.

ஸ்கூல் பீஸ், யூனிஃபார்ம் என்று நடுவே ஒரு நடை லிங்கிச் செட்டித் தெரு. தொடர்கிற தீவிர முயற்சிகள். விடுமுறை இல்லாததில் அன்றாடம் அலுவலகம். அக்கவுண்டண்ட்டைப் பார்க்கிறபோதெல்லாம் சலாம் வைத்து விடுகிறான். அவ்வகையில் வருவது, போவது குறித்துப் பிரச்னைகள் இல்லை. விளையாட்டுப் போல் நாட்கள் ஓடி செப்டம்பர் மாதம் வருகிறது.

''வணக்கம் சார்.''





## "இதில் என்ன ஆச்சரியம்!"

ஒரு சமயம் அமெரிக்க ராணுவ வீரன் ஒருவன் ஸ்வீடன் நாட்டில் பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்த பொழுது, அருகில் அமர்ந்திருந்தவரிடம், 'உலகிலேயே அமெரிக்காவில்தான் ஜனநாயக உணர்வு அதிகம். அங்கு சாதாரணக் குடிமகன் கூட வெள்ளை மாளிகை சென்று ஜனாதிபதியுடன் எளிதாக உரையாடலாம்' என்றான்!

அதற்கு அருகிலிருந்தவர், 'இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது! எங்கள் நாட்டில் அரசர் கூட சாதாரண மக்களுடன் மக்களாகச் சேர்ந்து ஒரே பஸ்ஸில் பயணம் செய்வார்' என்று சொல்லிக் கொண்டே பஸ்ஸிலிருந்து இறங்கிச் சென்று விட்டார். அவர்தான் ஆறாம் குஸ்தவ் அடால்ஃப் என்ற ஸ்வீடன் மன்னர்

'ஹிண்டு' விலிருந்து
- நெல்லை வி. சிவா.

டைரக்டர் கண்களைத் திறக்கிறார். சர்வர் சுந்தரத்தில் நாகேஷ் போல் நடந்த பையன். ஷூட்டிங் தொடங்கி முதல் ஷெட்யூல் முடிந்து விட்டது. எனினும் எதிரே திறமையான பையன்.

"ம்..."

டைரக்டர் யோசிக்கிறார்.

"ஒரு பதினைந்து நாள் லீவ் போட வேண்டியிருக்கும். பரவாயில்லையா?"

லக்ஷ்மிநாராயணன் உற்சாகமாய்த் தலையாட்டுகிறான்.

அடையாறு கல்லூரி. யூனிட் வேன்கள் அதிகாலையில் வந்து விட்டன. கேட்டிலிருந்து ஜெனரேட்டர் கேபிள் போகிறது. மாணவர் உடையில் தொழில் முறை நடிகர்கள் நிற்கிறார்கள். மஞ்சள் துணி சுற்றி கேமிரா வந்து விட்டது. டிபன் வண்டியில் அலுமினியத் தூக்குகள் இறங்குகின்றன. மெயின் ரோட்டில் பஸ் இறங்கி லக்ஷ்மிநாராயணன் வியர்க்க ஓடி வருகிறான். பல வர்ணக் குடையில் டைரக்டர் அமர்ந்திருக்கிறார்.

"யாருய்யா காஸ்ட்யூமர்? வாய்யா இங்கே. அதென்ன ஜூனியர் ஆர்ட்டிஸ்ட்டுக்கு முக்கால் பாவாடையா தைச்சிருக்கே? படம் ஓடணுமா, வேணாமா? போய்யா, போய் ஒன்றரை ஜான் மடிச்சு தையல் போடு."

"குட்மார்னிங் சார்."

டைரக்டர் தலையசைக்கிறார். டென்ஷனில் ஃபாரின் சிகரெட் வெளியே வருகிறது. லக்ஷ்மிநாராயணனை அவர் பார்த்தாரா என்பது கூடத் தெரியவில்லை. நடுவே பூச்செடிகளை வட்டமிட்டு, கதாநாயகன் கார் வருகிறது. டைரக்டர் பக்கத்தில் புதிய நாற்காலி முளைக்கிறது. ஒப்பனையின் ஊடே கதாநாயகி கண்ணாடியில் வரவேற்றுச் சிரிக்கிறாள். குட்டைப் பாவாடை மேல் பூத்துண்டு போர்த்தியிருக்கிறாள். வாடகைக்கு எடுத்த இருபது புதிய சைக்கிள்கள் வந்து விட்டன.

காலை ஒன்பது மணிக்கு முதல் ஷாட். கல்லூரி அட்மாஸ்பியர் காட்சிகள். கதாநாயகன் நண்பர்களுடன் சைக்கிளில் வருகிறான். கதாநாயகி தோழிகளுடன் சைக்கிளில் வருகிறாள். மரத்தடியில் ஜோடி ஜோடியாய் மாணவர்கள். நண்பர்களுடன் வெராந்தாவில் கதாநாயகன் நடந்து வருகிறான். எதிரே கதாநாயகி முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள். மதியம் ஒரு மணி ஆகிறது. டைரக்டர் இன்னமும் லக்ஷ்மிநாராயணனைப் பார்க்கவில்லை.

"சாப்டீங்களா?"

யாரோ, யாரையோ கேட்கிறார்கள். லக்ஷ்மிநாராயணன் மெல்ல நகர்ந்து தொலைவில் மரத்தடியில் சாப்பிடுகிற டைரக்டர் கண்களில்படும்படி நின்று கொள்கிறான். அப்படியும் மதியம் வகுப்பறையில் லைட்டிங் முடிந்து டேக்கிற்கு கொஞ்சம் முன்பாக புரொடக்ஷன் ஆள் அவனை வெளியே விரட்டும் போதுதான் டைரக்டர் கவனிக்கிறார்.

"யோவ், யோவ். விடுய்யா. அது நம்மாளு."

மத்தியானம் சாப்பிடாததில் லக்ஷ்மிநாராயணனுக்கு அழுகையே வந்து விடுகிறது. கதாநாயகனுக்குப் பின்வரிசையில் அமர்ந்திருந்த ஆளை நகர்த்தி, டைரக்டர் லக்ஷ்மிநாராயணனை உட்கார்த்தி வைக்கிறார். புரொடக்ஷன் ஆள் கூடையில் பொட்டலங்கள் எடுத்து வந்து எல்லோரிடமும் கொடுக்கிறான். லக்ஷ்மிநாராயணன் படபடக்கும் இதயத்தில் பொட்டலத்தின் மூலை கிழித்துப் பார்க்கிறான். உள்ளே பெண்களின் உள்ளாடை ஒன்று இருக்கிறது.

உரத்த குரலில் டைரக்டர் காட்சியை விளக்குகிறார். முன்னதாக கதாநாயகி, கதாநாயகனை அவமானப்படுத்தியிருக்கிறாள். அதற்குப் பழிவாங்கும் வண்ணமாகத் தற்சமயம் வகுப்பறையில் கதாநாயகியும், தோழியர்களும் நுழையும் போது கதாநாயகனின் நண்பர்கள் பெண்களின் உள்ளாடை

அணிந்து வரவேற்று நடனமாடி அவமானப் படுத்த வேண்டும். நேரம் ஆகிறது. எல்லோரும் சீக்கிரம் சட்டையைக் கழற்றினால் தேவலை.

''சார்.''

டென்ஷனில் டைரக்டர் திரும்புகிறார். லக்ஷ்மிநாராயணன் உட்கார்த்தி வைத்த இடத்திலிருந்து எழுந்து இறங்கி வந்து விட்டான்.

''என்ன?''

''வேணாம் சார். நான் நடிக்கலை.''

''ஏன்? ஏன்?''

''பெரிய பெரிய ஆர்ட்டிஸ்ட் பேரைச் சொல்லி நான் நடிக்க சான்ஸ் கேட்டு வந்தேன் சார். இந்த வேஷத்துல நான் நடிச்சா அது எனக்கும் பெருமையில்ல. அவங்களுக்கும் பெருமையில்ல.''

தெருக்கதவு அமைதியாகத் திறக்கிறது. சைக்கிளை லக்ஷ்மிநாராயணன் ஸ்டாண்ட் போட்டு நிறுத்துகிறான். வரவேற்பறையை அவன் மௌனமாய்க் கடக்கிற போது, மாமனார் பேரனுடன் கொஞ்சிக் கொண்டிருக்கிறார். சமையலறையில் விஜயலக்ஷ்மிக்கு அவனைக் கண்டதும் முகம் ஆச்சர்யத்தில் மலர்கிறது.

''எப்போ வந்தேள்?''

''இப்பத்தான்.''

விஜயலக்ஷ்மி நொடியில் காப்பி கலந்து எடுத்து வருகிறாள்.

''மத்தியானம் யாரு வந்திருந்தா சொல்லுங்கோ.''

லக்ஷ்மிநாராயணன் மௌனமாய் அவளைப் பார்க்கிறான்.

''வனஜா.''

''யாரு?''

''கரண்ட் அக்கவுண்ட் வனஜா.''

காதில் ஒலித்த பெயரில் உலகம் இளகியது.

''என்னவாம்?''

''ஆபீஸ் பரீட்சையில அவங்க பாஸா யிட்டாங்களாம். நாளைக்கு பாம்பே போறாங்களாம். ஸ்வீட் கொண்டு வந்தாங்க. நீங்க இருந்தா பார்த்துச் சொல்லிட்டுப் போகலாம்னு வந்தாங்க.''

விஜயலக்ஷ்மி ஸ்வீட் டப்பாவை எடுக்கிறாள். சமையலறையில் சம்பந்தமேயில்லாமல் எட்டிப் பார்த்து விட்டு வெறுமனே மாமனார் போகிறார். அவர் நான்கு வார்த்தைகள் திட்டியிருந்தால் கூட லக்ஷ்மிநாராயணனுக்கு அவ்வளவு அவமானமாய் இருந்திருக்காது.

(தொடரும்)

'மேயர்' என்றால் என்ன என்பது கூட இன்றைய தலைமுறைக்குத் தெரியுமோ?' என்று சந்தேகிக்கும் அளவுக்குக் கார்ப்பரேஷன் தேர்தல்களும் மேயர் தேர்தலும் நடந்து எத்தனையோ காலம் ஆகிவிட்டது. ஆயினும் முறைப்படி நகராட்சித் தேர்தல்கள் நடந்த காலமும் ஆண்டுதோறும் மேயர் தேர்தல் நடந்த பொற்காலமும் ஒன்று இருக்கத்தான் செய்தது. 1936 முதல் 1959 வரை 23 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து நகரத் தந்தையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 1944ல் மேயராகவும் விளங்கியவர் எம். ராதாகிருஷ்ண பிள்ளை. இன்றைய இந்தியன் வங்கி சேர்மன் எம். கோபாலகிருஷ்ணனின் தந்தை. மேயரின் வாழ்க்கை வரலாறு நூலிலிருந்து சில பகுதிகள் :

# "மில்க் மேயர்! மேயர் மேக்கர்!"



மேயர் ராதாகிருஷ்ண பிள்ளை

●● சென்னை நகரில் ஏழைக் குழந்தைகளுக்கும் இளம் குழந்தைகளின் தாய்மார்களுக்கும் இலவசமாகப் பால் வழங்கும் திட்டம் ராதாகிருஷ்ண பிள்ளையினால் தான் தொடங்கப்பட்டது. இந்தப் பணிக்காகச் சென்னை மாநகராட்சி கூடுதலாக ஊழியர்களை நியமித்தது. தொடக்கத்தில் அரசாங்கம் 1500 படி பால் வழங்கியது. அதனை மாநகராட்சி ஏற்றுக் கொண்டது. பின்னர் படிப்படியாக அந்த அளவு பெருகியது. ''மில்க் மேயர்'' என்று அனைவரும் ராதாகிருஷ்ண பிள்ளையை அழைக்கத் தொடங்கினர்.

●● சென்னை மாநகரின் சிறப்புமிக்க அம்சங்களுள் ஒன்றாக விளங்குவது நேரு விளையாட்டுத் திடல். (நேரு ஸ்டேடியம்). ராதாகிருஷ்ண பிள்ளையின் சீரிய தலைமையில்தான் இது திட்டமிடப்பட்டு உருவாக்கப்பட்டது.

●● நிதி சம்பந்தப்பட்ட பணிகளில் ராதாகிருஷ்ண பிள்ளை மிகவும் எச்சரிக்கையுடன் நடந்து கொள்வார். நிதி வரி விதிப்புக் குழுவுக்கு அவர் தலைவராக இருந்த போது ஒருமுறை அவர் கலந்து கொள்ளாத ஒரு கூட்டத்தில் ஒரு டெண்டர் ஏற்கப்பட்டது. பின்னர் அரசாங்கத் தணிக்கையாளர் அதனை ஆட்சேபித்து அதற்காக 'சர்சார்ஜ்' தொகையைச் செலுத்த வேண்டும் என்று பரிந்துரை கூறினார். தாம் கலந்து கொள்ளாத கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவு தம்மைக் கட்டுப்படுத்துமா என்ற கேள்வியை அவர் எழுப்பியிருக்கலாம். ஆனால் அவர் அத்தகைய நுட்பமான காரணங்களைச் சுட்டிக்காட்டி வாதிட விரும்பாமல், தாம் இல்லாத போது நேர்ந்த தவறுக்குத் தாமும் பொறுப்பு ஏற்பதாக முன்வந்தார். குறிப்பிட்ட தொகையையும் அவர் செலுத்தினார்.

●● ராதாகிருஷ்ண பிள்ளை தமிழில் முப்பதுக்கும் மேற்பட்ட சிறந்த நூல்களை எழுதியிருக்கிறார். சிங்கவேள் குன்றம் முதல் அலைவாயாம் திருச்செந்தூர் முடிய இருநூற்று ஒரு ஆலயங்களையும் நேரில் சென்று தரிசனம் செய்து, தல வரலாறுகளையும் மகிமைகளையும் கண்டும் கேட்டும் எழுதியுள்ளார்.

●● ஒவ்வோர் ஆண்டும் மேயர் தேர்தல் வரும் போது நல்லவர்களைத் தேர்ந்தெடுப்பது அவருடைய முக்கிய குறிக்கோளாக இருந்தது. அவரை மேயரை உருவாக்குபவர் (மேயர் மேக்கர்) என்று எல்லோரும் அழைப்பர்.

●● ராதாகிருஷ்ண பிள்ளை அவர்களின் பெயரின் ஆங்கில முதலெழுத்து 'எம்' என்பதாகும். மணியம் என்ற சொல்லை அது குறிக்கிறது. ராதாகிருஷ்ண பிள்ளையின் தகப்பனார் வழிமுன்னோர்கள் மணியம் பொறுப்பை வகித்தவர்கள். மணியக்காரர் வீடு என்ற கருத்தை எடுத்துக் கூறும் வகையில் 'எம்' என்ற முதல் எழுத்து, ராதாகிருஷ்ண பிள்ளை பெயருக்கும், அவரது ஒரே புதல்வரான கோபாலகிருஷ்ணன் பெயருக்கும் அமைந்துள்ளது.

– பாலன் பூங்குழலி

''மேயர் எம். ராதாகிருஷ்ண பிள்ளை வாழ்க்கையும் பணிகளும் – ஓர் ஆய்வு'' நூலிலிருந்து. ஆசிரியர் கருப்பையா; வெளியீடு : பேராசிரியர் பழனிசாமி அறக்கட்டளை, 10, அம்மையப்பன் தெரு, ராயப்பேட்டை, சென்னை – 14.

விலை ரூ. 150.00

# நீங்கள் ''ஜீவன் சுரபி'' பாலிசியை எடுத்து உங்கள் குடும்பத்திற்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பை அளியுங்கள்



# ஜீவன் சுரபி

## அதிகரிக்கும் ஆயுள் பாதுகாப்புடன் குறுகிய கால இடைவெளிகளில் உங்களுக்கு கணிசமான தொகை கிடைக்கிறது.

இது பல்வேறு பயன்களை அளிக்கும் ஒரு புதிய இன்ஷ்யூரன்ஸ் பாலிசி திட்டமாகும்.

- ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பை 50%லிருந்து 200% வரை உயர்த்துதல் (இது, ஆறு வருடங்கள் மற்றும் அதற்குமேல் எவ்வளவு காலம் வரை பாலிசி அமலில் இருந்ததைப் பொருத்ததாகும்).

- 15-வருட பாலிசிக்கு 12 வருடங்கள் கழிந்த பின்பு, 20-வருட பாலிசிக்கு 15 வருடங்கள் கழிந்த பின்பு மற்றும் 25-வருட பாலிசிக்கு 18 வருடங்கள் கழிந்த பின்பு யாதொரு ப்ரீமியம் தொகையை செலுத்த தேவையில்லை. இருப்பினும், இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு பாலிசியின் முழுமையான காலம் வரை அமலில் இருக்கும்.

- பாலிசி தொகையைப் பெற நீங்கள் பாலிசி காலவரையின் இறுதி வரை காக்க வேண்டாம்.

கீழ்கண்ட அட்டவணையில் குறிப்பிட்டுள்ளவாறு இத்தொகை நிர்ணயிக்கப்பட்ட இடை வெளிகளில் தவணை முறையில் உங்களுக்கு வந்து சேரும்.

| | பாலிசிதாரருக்கு கொடுக்கப்படும் இன்ஷ்யூர் செய்யப்பட்ட தொகையின் % | | | | |
|---|---|---|---|---|---|
| பாலிசியின் காலவரை | 4 வருட இறுதியில் | 8 வருட இறுதியில் | 12 வருட இறுதியில் | 15 வருட இறுதியில் | 18 வருட இறுதியில் |
| 15 வருடங்கள் | 30% | 30% | 40% | – | – |
| 20 வருடங்கள் | 25% | 25% | 25% | 25% | – |
| 25 வருடங்கள் | 20% | 20% | 20% | 20% | 20% |

உயிருடன் இருக்கையில் கொடுக்கப்பட்ட தொகைகள், பாலிசிதாரர் இறந்த பின் அவருக்குரித்தான இன்ஷ்யூர் செய்யப்பட்ட தொகையிலிருந்து கழிக்கப்பட மாட்டாது.

ஆம், உண்மையில் இது ஒரு பல்வேறு பயன்தரும் இன்ஷ்யூரன்ஸ் திட்டமாகும்.

*மேற்கொண்டு விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள எல்.ஐ.சி அலுவலகத்தையோ அல்லது எல்.ஐ.சி முகவரையோ அணுகவும்.*

**இன்ஷ்யூர் செய்யுங்கள் பத்திரமாக இருங்கள்.**

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

# தடுக்கி விழுந்தால் தனிநபர் கமிஷன்!

**மா**ண்புமிகு சத்துணவு மந்திரி சடகோபன் சாக்குப்போக்குப் பட்டியில் ஒரு சத்துணவுக் கூடத்தைத் திறக்கப் போன பொழுது தடுக்கி விழுந்தார் என்பதை, அவ்வளவு பெரிய செய்தியாகக் கருதாமல்தான் அதைப் பேப்பரின் நாலாம் பக்கத்தின் ஒரு மூலையில் போட்டிருந்தார்கள்.

மந்திரியும் நாலு பேர் மத்தியில் இப்படி தடுக்கி விழுந்துவிட்டோமே என்று வெட்கப்பட்டு, சுதாரித்துக் கொண்டு எழுந்து, ஓர் அசட்டுச் சிரிப்போடு அந்தச் சத்துணவுக் கூடத்தைத் திறந்து விட்டும் வந்தாயிற்று. அன்று மாலைப் பத்திரிகையில், கடுகாக இருந்த செய்தி காலையில் மலையாக உப்பியிருப்பதைப் பார்த்து அவருக்கே அதிர்ச்சியாய் இருந்தது.

''மந்திரி தடுக்கி விழுந்ததன் மர்மம்! சதி வேலையா! திடுக்கிடும் தகவல்!'' என்று ஒரு டஜன் ஆச்சர்யக்குறிகளோடு தலைப்புச் செய்தியாய் வந்திருந்ததைப் பார்த்து, இது யாருடைய சதிவேலை என்று மந்திரி தலையை பிய்த்துக் கொண்டார். எதிர்க் கட்சியினர் மீது பழி சுமத்தப்பட்டு, சட்டசபையில் இது சம்பந்தமான விவாதத்தின் போது, 'பாட்டா' வீசப்பட்டு, படிப்படியாக சம்பவத்தைப் பற்றிய ஆராய்ச்சி மோசமான நிலைமைக்குத் தள்ளப்பட்டு, கடைசியில் அரசாங்கம் இதிலிருந்து கழன்று கொள்ள ஏதுவாக ஒரு தனி நபர் கமிஷன் அமைக்கப்பட்டது.

**ஓ**ய்வுபெற்ற நீதிபதி நிஜமுகன் தாம் உண்டு தம் வாழ்வு உபாதை உண்டு என்று தம் அந்திமகாலத்தில் அதிகாலை ஜாக்கிங் போய்க் கொண்டிருந்த பொழுதுதான் அந்த பெட்டிக் கடையில் தொங்கிக் கொண்டிருந்த தலைப்புச் செய்தியைப் பார்க்க நேர்ந்தது. ''மந்திரி தடுக்கி விழுந்தது பற்றி விசாரணை. நீதிபதி நிஜமுகன் தலைமையில் ஒரு நபர் கமிஷன் அமைப்பு'' என்று கொட்டை எழுத்தில் பார்த்ததும் இது ஏதடா வம்பு என்று மயங்கி அவர் கட்டையே கீழே விழும் நிலைமைக்குள்ளானார்.

அன்றே அவருக்கு அரசாங்கத்திலிருந்து ஓலை வந்து விட்டது. ஒரே மாதத்தில், கமிஷன் அறிக்கை வெளியிட வேண்டுமென்று உத்திரவிடப்பட்டிருந்தது. பாவம் நிஜமுகன்! அதே மாதத்தில் தம் பெண் கல்யாணத்தை வைத்துத் தொலைத்திருந்





தார். ஆகவே, சட்டு புட்டென்று தம் விசாரணையை ஆரம்பிக்கத் துடித்தார். ஆகவே, தமக்கென்று ஒதுக்கப்பட்ட போலீஸ் மற்றும் புலன் விசாரணைப் படை சூழ, சாக்குப்போக்குப் பட்டிக்கு உடனே பயணமானார்.

பயணத்தின் போதே பலவிதச் சிந்தனைகளை அடுக்கி, தடுக்கி விழுவதற்கான சாத்திய கூறுகளை அவர் மனம் ஆராய்ந்து கொண்டிருந்தது. ஒருவர் தடுக்கி விழுகிறார் என்றால் அது புல் தடுக்கியும் இருக்கலாம், ஃபுல் தண்ணியினாலும் இருக்கலாம். அமைச்சர் தடுக்கி விழுந்த இடத்தில் புல் முளைத்திருக்கிறதா, அப்படி முளைத்திருந்தால் அதற்கு யார் காரணம் என்பதை அலசலாம். ஒரு வேளை மந்திரிக்கு 'தண்ணி' போடும் பழக்கம் இருக்கக் கூடுமோ! இதை எப்படி மந்திரியிடம் கேட்டு வம்பில் மாட்டிக் கொள்வது? மற்ற எந்தெந்தக் காரணங்களால் ஒருவர் தடுக்கி விழக் கூடும்... ஒரு முறை மனைவி ஓங்கி ஒரு சப்தம் போட்டு அதட்டியதில் மிரண்டு, தாம் பாத்ரூமில் விழ நேர்ந்தது, அவருக்கு நினைவு வந்தது. ஒரு வேளை முதல்வர் காலில் விழ வேண்டுமென்று சதா சிந்தித்துக் கொண்டிருப்பதில் சடகோபன் தடாலென்று தன்னையறியாமல் விழுந்திப் பாரோ... நிஜமுகன் பஞ்ச முகனாக யோசனை செய்து குழம்பினார். ஆனால் ஒன்றில் மட்டும் அவர் தெளிவாய் இருந்தார்; இன்னார்தான் காரணம் என்று குறிப்பிட்டு அறிக்கை விட்டு, எக்குத்தப்பாக மாட்டிக் கொள்ளக் கூடாது. பெண்ணுக்கு வேறு அடுத்த மாதம் கல்யாணமாகியாக வேண்டும்!

***சா***க்குப்போக்குப்பட்டி.

நிஜமுகனின் அறிவுரைப்படி, நிகழ்ச்சி நடைபெற்ற சூழ்நிலையை அப்படியே திரும்பவும் கொண்டு வந்திருந்தார்கள். ஏற்கெனவே கமிஷன் அறிவிப்பு வந்ததிலிருந்து அந்த இடத்தில் ஆள் நடமாட்டம் இல்லாமல் பாதுகாத்து வைத்திருந்தனர். இப்போது அதே சத்துணவுக் கூடம் அலங்காரமாக நிற்க, அமைச்சர் வந்த போது அதிகாரிகள், கட்சிக்காரர்கள், போலீஸ்காரர்கள் எங்கெங்கு நின்றார்களோ அங்கங்கே நிற்க, அதே அமைச்சர் காரில், அதே ஓட்டுநர், அதே கலெக்டர் என எல்லாம் அதே அதே... ஆனால் அமைச்சருக்குப் பதில் நிஜமுகன் வந்து இறங்க ஆயத்தமானார்.

காரின் கதவை ஓர் அதிகாரி திறக்க, நிஜமுகனின் தலை வெளியே நீண்டதும் ஒரு மாலை அவர் கழுத்தில் விழ, காமிராக்கள் பளிச்சிட, அப்போதுதான் தாம் கால் வைத்த இடத்தில் அதை நிஜமுகன் காண நேர்ந்தது. அது ஒரு காய்ந்த வாழைப் பழத்தோல். 'நிஜமுகன் நீங்க எங்கேயோ போய் விட்டீங்க!' பார்வை பிளஸ் புன்னகையோடு அனைவரையும் ஒரு பார்வை பார்த்தார். கீழே குனிந்து அந்த வாழைப்பழத் தோலைப் பெருமையோடு எடுத்தார்.

''பார்த்தீங்களா?'' பழத்தோலைப் பக்கத்திலிருந்த போலீஸ் அதிகாரியிடம் காட்டிய போது, அனேகமாக அவர் விசாரணைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிட்ட நிலையில்தான் இருந்தார்.

''புரியுது சார்... மந்திரி வாழைப் பழத்தோலில்தான் வழுக்கி விழுந்திருப்பார்னு சொல்றீங்க...'' என்றார் அதிகாரி.

''கரெக்ட்... மந்திரி தடுக்கி விழலை... வழுக்கித்தான் விழுந்திருக்கணும்.''

''அதுமட்டும் போதுமா சார்... காரணம் சொல்ல வேணாங்களா?''

''காரணம் என்னய்யா காரணம்... வாழைப்பழம்தான்.''

அகிலா கார்த்திகேயன்

''அது சரி..... இப்படி வழவழன்னு அறிக்கை கொடுக்க, கமிஷன் எதுக்கு சார் கமிஷன்... அந்த வாழைப்பழத்தோலை யார் அங்கே போட்டது... அது ஏன் சுத்தம் செய்யாமல் விடப்பட்டது.... அதற்கான உள்நோக்கம் என்ன... இப்படி நீர விசாரிச்சாத்தானே சார் ஒரு நூறு பக்கத்துக்காவது அறிக்கை தர முடியும்? இப்படி ஒரே நாளில் ஒரே நிமிஷத்திலே முடிவெடுக்கறத்துக்கு 'கமிஷன்'னு ஏன் பேரு?''

அந்த காவல் துறை அதிகாரி சற்று அதிகப் பிரசங்கித்தனமாகத் தமக்கு அட்வைஸ் பண்ணியதில் நிஜமுகனுக்குக் கோபம் வந்தாலும், அவர் சொன்னதில் அர்த்தமும் இருப்பதாகப் பட்டது. சற்று சுதாரித்துக் கொண்டு உடனே அந்த அதிகாரியையே மடக்கினார்.

''சம்பவம் நடந்த அன்னிக்கு நீங்க கூட இந்த இடத்திலேதானே இருந்திருக்கீங்க.... ஏன் நீங்களே சாப்டுட்டுப் போட்டிருக்கலாமில்லே....''

''ஹி.... ஹி'' போலீஸ் அதிகாரி அசடு வழிந்தார். ''நான் வாழைப்பழம் சாப்பிடற வழக்கமே இல்லீங்க... அப்படி சாப்டாலும் பச்சை வாழப்பழம்தான் சாப்பிடுவேன். இது மஞ்சள் வாழப்பழத் தோலாச்சே!'' என்றார் சாமர்த்தியமாக.

''அதை எப்படிய்யா நம்பறது? இது காய்ந்து போன தோலு... பச்சைப் பழமா மஞ்சள் பழமான்னு நீங்க சொல்றதை எடுத்துக்க முடியுமா... இதை உடனே விவசாய ஆராய்ச்சி நிலைத்துக்கு அனுப்ப ஏற்பாடு பண்ணுங்க.. பச்சையா மஞ்சளான்னு அவங்க அறிக்கை தரட்டும்... அப்புறம் நீங்க மஞ்சப்பழமே தின்னதில்லைன்னு புரூவ் பண்ணுங்க பாப்போம்.'' இப்படி தன்னையே கிடுக்கிப் பிடியாய்ப் பிடித்துத் தொலைப்பார் என்று அதிகாரி எதிர்பார்க்கவில்லை.

பதில் சொல்ல வராமல் அதிகாரி நாணிக்கோணி தலை குனிந்து, தம் பூட்ஸ் காலால் தரையில் அரைவட்டம் போட்டுக் கொண்டிருந்த போது, அங்கே இடறப்பட்ட உருண்டை உருண்டையான சமாசாரங்களால் ஈர்க்கப்பட்டார். உடனே அதிரடியாய்த் தரையில் தவழ்ந்து, அந்த உருண்டைகளை இரு கைகளிலும் அள்ளி எடுத்தார்.

''என்னைச் சந்தேகப்பட்டீங்களே... இப்ப என்ன சொல்றீங்க?'' என்று தம் இருகைகளிலும் அள்ளிய உருண்டைகளைப் பாவை விளக்குபோல் நீதிபதியிடம் நீட்டி நின்றார்.

''இது என்னய்யா கர்மம்?'' நிஜமுகன் கோபப்பட்டார்.

''கமிஷன்'னு ஆனப்புறம் கர்மம், அது இதுன்னு பார்த்தா எப்படி சார்! இது ஆட்டுப் புழுக்கை!''

''அட! வழுக்கலுக்கும் புழுக்கைக்கும் என்னய்யா முடிச்சு?'' என்றார் நிஜமுகன்.

''அப்படி கேளுங்க! இந்த வாழைப் பழத்தோலை இங்கே ஓர் ஆடு வந்து போட்டிருக்கணும்... இல்லே மந்திரி மேலே பாயவிடலாம்னு யாரோ ஆட்டைத் தயார் பண்ணி சம்பவத்தன்னிக்கு இங்கு மேய விட்டிருக்கணும்... உடனே இந்த கிராமத்திலே எத்தனை ஆடு, அதுங்களை யார் யார் வளர்க்கறாங்கன்னு ஒரு சர்வே பண்ணிடலாம்.... என்ன சொல்றீங்க?'' எப்படியோ தம்மேல் பாயவிருந்த பழியைத் திசை திருப்பி விடலாமென்று அதிகாரி சொல்லிக் கொண்டே போனார்.

''போதும் நிறுத்துங்க... இதெல்லாம் நீங்க சொல்லித்தான் நான் செய்யணுமா என்ன? நீங்க ஆட்டுப் புழுக்கையைக் காட்டிய உடனேயே எனக்குத் தோணிப் போச்சு... இதைப் பத்தி உடனே விசாரிக்க ஏற்பாடு பண்ணுங்க.''

விசாரிக்கப்பட்டதில் கிராமத்தில் இரண்டு பேர் வீட்டில்தான் ஆடுகள் உண்டென்றும் அதில் ஒருவர் ஆளுங்கட்சி ஆறுமுகம், மற்றொருவர் எதிர்க்கட்சி ஏகாம்பரம் என்பதும் தெளிவாயிற்று. உடனே இருவர் வீட்டிற்கும் அதிரடி விஜயம் செய்யக் கிளம்பினார்கள்.

---

## சீட்டுக் கட்டு பற்றிய சுவாரஸ்யமான விஷயம்!



ஒரு முழுச் சீட்டுக்கட்டுக்குள் ஒரு வருடமே அடங்கியுள்ளது. ஒரு முழுச் சீட்டுக்கட்டை ஒரு வருடமாக எடுத்துக் கொண்டால் அதன் நான்கு ஜாதிகளே வருடத்தின் நான்கு பருவங்கள். மொத்தமுள்ள 52 சீட்டுகள் வருடத்தின் 52 வாரங்கள். Aஸை ஒன்றாகவும், ஜாக்கி, ராணி, ராஜாவை முறையே பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்று என்றும் கொள்ள வேண்டும். 1, 2, 3... 13 வரை உள்ள எண்களின் கூட்டுத் தொகை 91 வரும். நான்கு ஜாதிகளுக்கு 4 X 91 = 364. இத்துடன் ஜோக்கரையும் சேர்த்தால் மொத்தம் 365. இது வருடத்தின் 365 நாட்களைக் குறிக்கிறது.

– பி. ஜெயப்பிரகாஷ்.

'ஆண்டவனே அது ஆளும் கட்சி ஆடாய் இருக்கக் கூடாதே' என்று வேண்டிய படி ஆறுமுகத்தின் வீட்டில் நுழைந்த நிஜமுகன், ஏதோ கமகமவென்று மசாலா வாசனை வரவே, அகமகிழ்ந்தார். ஆறுமுகத்தின் ஆடு ஆடி அடங்கி மசாலாவோடு கொதித்துக் கொண்டிருந்தது. இருந்தாலும் விசாரிக்காமல் விட்டால் எப்படி என்று நிஜமுகன்,

''ஆட்டை வெட்டிட்டீங்க பரவாயில்லை... இது உங்க ஆட்டுப் புழுக்கை தானே?'' என்றார். உள்ளுக்குள் ஆறுமுகம் எக்குத் தப்பாக 'ஆமாம்' என்று சொல்லி விட்டால் ஆளும்கட்சி ஆளை வம்புக் கிழுக்க நேருமே என்று உதைத்தது.

''ஐயோ.... என் ஆடு வெள்ளாடு... இது செம்மறி ஆட்டுப் புழுக்கை... எதிர்க் கட்சி ஏகாம்பரம்தான் செம்மறி ஆடு வளர்க் கறான்!''

''அசத்திட்டே ஆறுமுகம்!'' ஏக குஷியோடு தம்மையும் அறியாமல் ஆறுமுகத்தைப் பாராட்டிவிட்டு, போலீஸ் அதிகாரியை ஓர் ஓரப்பார்வை பார்த்தார்.

புரியுதுங்க... நீங்க ஒண்ணும் கவலைப் படாதீங்க. ஏகாம்பரத்தை நாலு தட்டுத் தட்டி இந்தச் சதியை எப்படி பிளான் பண்ணினான்னு கக்க வைச்சிடலாம்... அதுக்கு முன்னால இந்த புழுக்கை வெள்ளாட்டோடதா, செம்மறி ஆட்டோட தான்னு கேட்டு ரிப்போர்ட் வாங்கணும்.''

''அதை நீங்க சொல்லித்தான் தெரியணுமா... ஒரு கமிஷன் ரிப்போர்ட்னா சும்மாவா... உடனே அந்த புழுக்கைங்களை எடுத்து இன்ஸ்டிடியூட்டுக்கு அனுப்புங்க...''

அறிக்கை சமர்ப்பிக்க வேண்டிய கடைசி கட்டம். உச்சமான அந்த விசாரணை தினத்தில் நிஜமுகன் நிஜமாகவே குஷியாக இருந்தார். அவர் மேஜை மேல் பாலிதின் கவரில் காய்ந்த பழத்தோல், பக்கத்தில் அது மஞ்சளா, பச்சையா என்பதற்கான ஆராய்ச்சி அறிக்கை, அன்றைய தினம் பழம் சாப்பிட்டவர்களின் லிஸ்ட், பழம் விற்கப் பட்ட கடை, பெட்டிக் கடைக்காரர், தள்ளு வண்டி பழவியாபாரி, ஆட்டுப் புழுக்கை, அதற்கான ரிசர்ச் ரிப்போட், ஆறுமுகம், ஏகாம்பரம் மற்றும் அவனுடைய செம்மறி ஆடு அத்தனையும் ரெடி! மந்திரி வர வேண்டும்.

இவைகளை வைத்துக் கொண்டு ஒரு எழுபது பக்கங்களுக்குக் குறைவில்லாமல் அறிக்கை எழுதலாம்... மேலும் குற்றச் சாட்டு எதிர்க்கட்சி ஏகாம்பரத்தைக் குறி வைக்கும் சாத்திய கூறுகள் இருப்பதால், ஒரு வழியாக கமிஷன் அறிக்கையைச் சுலபமாகத் தந்து விடலாம்....

மந்திரி வந்து அவரிடமும் ஒப்புக்கு ஒரு விசாரணை செய்து விட்டால் ஆயிற்று... ரிப்போர்ட்டை ரெடி செய்து தூக்கி எறிந்து விட்டு, பெண் கல்யாணத்திற்கு ஆக வேண்டியதைக் கவனித்தாக வேண்டும்....

நிஜமுகன் சிந்தித்தபடி உட்கார்ந்திருக்கும் போது மந்திரி வந்து விட்டதாகத் தகவல் வரவே, அவரை வரவேற்கத் தாமும் எழுந்து சென்றார்.

கார் வந்து நின்றதும், கதவு திறக்கப் பட்டது. கைகளைக் கூப்பியபடியே காரி லிருந்து இறங்கிய அமைச்சர், எதிர்



''முதலாளி! எம்.எல்.ஏகிட்டே யிருந்து போன் வந்திருக்கு!''

''என்னவாம்?''

''உள்ளே காசில்லாமல் சாப் பிட்டுட்டு மாவாட்டிக்கிட்டிருக்கிற நாலவது வட்டச் செயலாளரை விட்டு டணுமாம்!''

– எஸ். ரமேஷ்.

பாராமல் 'தொபகடீரென்று' மறுபடியும் சாஷ்டாங்கமாகத் தம் முன்னால் விழவே, நிஜமுகன் நிலை குலைந்து போய்விட்டார்.

தட்டுத் தடுமாறி, சட்டை வேட்டிகளில் ஒட்டியிருந்த புழுதிகளைத் தட்டி விட்டபடி எழுந்து கொண்ட அமைச்சர், சுற்று முற்றும் பார்த்தபடி, ''ஹி... ஹி.... உங்களைப் போல பெரியவங்க காலில் விழுறதுன்னா எனக்கு ரொம்பப் பிடிக்கும்... உங்களோட ஆசீர்வாதம் எப்பவும் எனக்குத் தேவை'' என்று உரக்கப் பேசியவர், ''சனியன் பிடிச்ச மூதேவி... அன்னிக்கும் இதே வேஷ்டியைக் கட்டிட்டு வந்துதான் விவகாரமாப் போச்சு... ஓரத்திலே கிழிஞ்சி தடுக்குது.... வேற வேஷ்டியை எடுத்து வைடீன்னேன்.... கடங்காரி அதையே எடுத்து வைச் சிருக்கா....'' என யாருக்கும் கேட்காமல் முணு முணுத்தது நிஜமுகனுக்கு மட்டும் காதில் விழுந்தது!

இருந்தாலும் 'கமிஷன் ரிப்போர்ட்' ரெடி!

# புஷ்பராகம்

## 29

**வ**ந்தான் அருஞ்சுனை. ஹாலில் வந்து உட்கார்ந்தான். ஒன்பது நாளும் ஜன்னல் ஆகாயத்தில் அமாவாசை தான். சூன்யம்தான். சொர்ணம் தட்டுப்படவே மாட்டாள்.

ஏதாச்சும் கேட்டாலும் பதில் வராது. மௌனத்தின் இறுக்கமே மனசுக்குள் குடைந்து கூச்சலிடும். முயற்சியே வீண் தானோ என்று மனம் கலங்கும்.

இலவங்காய் பழுக்கும், கனியும் என்று காத்திருந்து ஏமாந்த கிளியின் கதையாகி விடுமோ! செலவழித்துக் கொட்டிய பணம் முழுக்க விரயம் தானா?

மனம் கிடந்து பதறும். உள் நடுக்கமாய் நடுங்கி அதிரும்.

உள்ளே நுழைந்திடுவோமா என்கிற உன்மத்தம் எழும். பலவந்தம் செய்து விடலாமா என்று உடம்பு கிளவெடுக்கும்.

காளையை நுகத்தடியில் மாட்டி அடித்து வசக்குவதைப் போல... இவளையும் பலாத்காரமாகத்தான் பணியவைக்க வேண்டுமா? அடிக்கிற மாடுதான் படியுமா?

சொர்ணத்தின் அழகான தேகம். தேகத்தின் தகதகப்பு. தகதகப்பின் கனிவு. குழைவு.

உள்மனத்தில் எழுகிற உன்மத்தம், வெறி. கிளவு.

சமாளித்துக் கொள்வான். சகித்துக் கொள்வான்.

வெண்ணெய் திரண்டு வருகிற போது... தாழியை உடைத்து விடக் கூடாது. எச்சரிக்கை வேண்டும்.

பல்லைக் கடித்துப் பொறுத்துக் கொள்வான்.

இன்றைக்கு -

ஜன்னல் ஆகாயத்தில் தங்க நிலா. சொர்ணத்தின் கருங்கூந்தலில் மல்லிகைச் சரம்.

சொர்ணம் மெல்லப் பேசினாள். சுடுபாடில்லாத குரல். ஒட்டாத குரல்.

''நா வந்து... பத்து நாளாச்சு?''

''ம்.''

''எங்க ஊர்லே என்ன ஆச்சுன்னு தெரியலே. எங்க அம்மா... அக்கா...''

''மொதல்லே பழநியை அரெஸ்ட் பண்ணுனாங்க. அப்புறம் முனியசாமின்னு ஒரு கிழவனைக் கட்டிப் போட்டு அடிச்சதுனாலே... உங்க மாமாவையும், நாட்டாமையையும் அரெஸ்ட் பண்ணி வச்சிருக்காங்க.''

''எங்க மாமாவையுமா?''

''ம்.''

''ஐயய்யோ... எங்க அக்கா, புள்ளைக எப்படிப் பதறுதுகளோ...''

''அப்போ..... உங்க மாமாவை ஜாமீன்லே எடுத்துரட்டா?''

''எடுக்கணும்.''

''ம்... சரி...''

''நா... எங்க மாமாவைப் பாக்கணும். அக்காவைப் பாக்கணும்.''

அருஞ்சுனை யோசித்தான். தயங்கினான்.

ஸ்டேஷனுக்குப் போனவுடன்... 'பூவை' மறந்து விடுவாளா? என்னைக் கடத்தியதே இவன்தான் என்று கூறி விடுவாளா? கதையே மாறிப் போய்விடுமே! கையில் விலங்கு ஏறி விடுமே... கதை கந்தலாகிப் போகுமே...

பயந்து பிரயோஜனமில்லை. ஆனது ஆகட்டும். எது வந்தாலும் ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான்.

விலங்கு கிடைத்தாலும் சரி..... பூவிலங்கு கிடைத்தாலும் சரி...

இப்போது இவளைக் கூட்டிக் கொண்டு போகத் தயங்கினால்... இவள் மனசில் வெறுப்பு வரும். கொதிப்பு வரும். தப்பித்து ஓட வேண்டும் என்கிற வெறி வரும்.

அதுதான் ஆபத்து... சாஸ்வத இழப்பு.

''என்ன...''

சொர்ணம்தான்.

''ஒண்ணுமில்லே. வாடகைக் கார் வரச் சொல்லணுமான்னு யோசிச்சேன்.''

''இல்லே, வேண்டாம். ஸ்கூட்டர்லேயே போயிருவோம்...''

''சரி.. போவலாம்.''

''காட்டிக் குடுத்துருவேன்கிற பயமில்லியா?''

''பயப்படுறதுனாலே ஒண்ணும் பிரயோஜனமில்லே.''

ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்து, அவன் உட்கார்ந்தான். அவளும் பின்னால் ஏறினாள். ஏறிப் பழக்கமில்லை. கூச்சமிருந்தது. சமாளித்துக் கொண்டாள்.

மேலாண்மை பொன்னுச்சாமி

பழக்கமின்மையால் நேரிடுகிற குழப்பம்.

அவன் உட்கார்கிறவிதத்தைப் பற்றிக் கூறினான். புரிந்து கொண்டாள்.

ஏறி உட்கார்ந்து கொண்டாள். வண்டி வழுக்கிக் கொண்டு நகர்கிற போது, அவள் உலுக்கப்பட்டாள். அதில்... அவளது உடல் அவனது முதுகில் உரச...

தீப்பிடித்த மாதிரி சுரீரென்று ஒதுங்கினாள். பின் நகர்ந்தாள்.

அடுத்த பத்தாவது நிமிடத்தில், ஸ்கூட்டர் காவல் நிலையத்தின் முன் நின்றது.

இன்ஸ்பெக்டருடன்... பழநி பேசிக் கொண்டிருந்தான். லாக்-அப்பில் நாராயண சாமியும், வெங்கடாசலமும்...

''சொர்ணமா!'' என்று பழநி அதிர்ந்தான். அப்புறம்தான் வந்திருப்பது சொர்ணம் என்பதே இன்ஸ்பெக்டருக்குத் தெரிந்தது.

லாக்-அப்பிற்குள் இருந்து நாராயணசாமியும் 'சொர்ணம்' என்று கத்தினான். அவன் கன்னமெல்லாம் நரைத்த முடிகள். காய்ந்து கிடந்த தலை.

பார்க்கவே பரிதாபமாக இருந்தது.

அருக்காணி முன்னால் நடக்க, சொர்ணம் பின்னால் வந்தாள். நேராக, மாமாவிடம் போனாள். கம்பியைப் பிடித்தாள். கண்ணீர் மளமளவென்று பெருக்கெடுத்தது.

''மாமா...'' என்றாள். அதற்கு மேல் பேச முடியவில்லை. நாசி நுனி விடைத்தது. காந்தலெடுத்தது. உதடுகள் துடித்தன. மனம் கிடந்து அடித்துக் கொண்டது.





# கோயில் காளை

ஒரே சமாசாரத்தை நூறு தரம் பார்த்த பிறகு, நூற்றி ஓராவது தடவையும் அதையே எதிர்கொள்ள நேர்கையில் ஏற்படுவது அலுப்பு - அலுப்பு மட்டுமே! இந்தப் படமும் விதிவிலக்கல்ல.

நல்லவன் மேல் பழி விழுவதும், பின் நீங்குவதுமான அதே கி.மு. காலத்துக் கதை.

வழக்கமாக, சண்டைக் காட்சிகளில் தூள் கிளப்பும் விஜயகாந்த், இந்தப் படத்தில் ஏனோ, எக்கச்சக்கமாய் அடி வாங்குகிறார். ஒருவேளை படமும் 'அடி' வாங்கப் போகிறது என்று சொல்லாமல் சொல்கிறாரோ?

கனகா, விஜயைத் துரத்திக் காதலிப்பதும், பின் ஃப்ளாஷ்பேக்கில் அத்தனையும் பழிவாங்கல் என்று ஜகா வாங்குவதும், கடைசியில் தமிழ்ப் பண்பு மாறாமல் காலில் விழுவதும்... போர்!

செந்தில், கவுண்டமணி காமெடி. சிரிப்பைத் தவிர மீதி எல்லாம் வருகிறது.

யாரையாவது பாராட்டலாம் என்றால், முதலில் நினைவுக்கு வருகிறவர் வில்லன் வீரபாண்டியன். புதுமுகம். கூடிய சீக்கிரம் ஹீரோவாகப் போகிறவர்.

இசை - பொங்கல் ரேஸில் அதிக இடம் பிடித்த இளையராஜா. இது அவரது சொந்தப் படம். பாடல்களை விட ரீ-ரெக் கார்டிங்கில் சிரத்தை அதிகம் தெரிகிறது.

அலுத்துப் போன கதை. புளித்துப் போன சம்பவங்கள். திரில் இல்லாத திருப்பங்கள். மூன்று, நான்கு கிளைமாக்ஸ்.

இயக்குனர் மனம் வைத்திருந்தால் ஓர் உருப்படியான பக்திப் படமாகவாவது உரு வாக்கியிருக்கலாம்!

- ஆர்.பி.ஆர்.

அக்காவையும் பிள்ளைகளையும் மனக் கண்ணில் பார்த்துக் கண்கலங்கினாள்.

சமாளித்துக் கொண்டாள். தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். கீழ் உதட்டை அழுந்தக் கடித்துக் கொண்டாள்.

''மாமா... எங்குழந்தைகளும் வீடும் தானே உங்களுக்கு வேணும்? அதுக்காகத் தானே... இத்தனை ஏற்பாடுகளும்?''

நாராயணசாமி வருத்தத்துடன் தலை குனிந்தான்.

''எம்புள்ளைகளையும், வீட்டையும் அக்கா பேருக்கு எழுதி வைச்சிர்றேன். அதுக் குப் பெறகாச்சும்... அக்காவுக்குத் துரோகம் நெனைக்காம இருப்பீகளா...?''

அவன் ஒன்றும் சொல்லாமல் மௌன மாய்ப் பார்த்தான். பார்வையில், அவமா னப்பட்ட ஒரு வேதனை. அடிபட்ட பறவை யின் சோகம். கண்களில் ததும்புகிற நீர்த் துளி.

இன்ஸ்பெக்டர், அருந்ததியிடம் சற்று காட்டமாகவே கேட்டார்.

''என்ன மிஸ்டர்... நீங்கதான் இந்தப் பொண்ணைக் கடத்துனீங்களா? இது எவ்வ ளவு பெரிய குற்றம் தெரியுமா?''

அதற்குள் - சொர்ணம் மேஜைக்கு அருகில் வந்தாள்.

''இல்லே சார்... அவர்கிட்டே நாந்தான் பாதுகாப்புக் கேட்டேன். அவரு என்னைக் கடத்தலை. பாதுகாப்புக் குடுத்தாரு.''

''நெஜமா?''

''நெசந்தான் சார்.''

''ஏம்மா... இப்படியெல்லாம் எங்க கழுத்தை அறுக்குறீக? நீங்க விளையாட்டு மாதிரி விளையாடுறீக? நாங்க ராத்திரியும் பகலுமா வெட்டியலைச்சலா... அலைஞ்சு சாகுறோம். அப்பவும், எங்களுக்குக் கெட்ட பேரு...''

அருந்ததி குறுக்கிட்டான்.

''சார்... என்னைத் தெரியுமா?''

''ஏன் தெரியாது? தீப்பெட்டியாபீஸ் முதலாளி. அருந்ததி. உங்களைத் தெரி யாம இருக்குமா?''

''அப்ப சரி.. உள்ளே இருக்கிற ரெண்டு பேருக்கும் நா ஜாமீன் தர்றேன், சார். ரிலீஸ் பண்ணிடுங்க.''

''சரி சார்.''

''அப்ப பேப்பர் தயார் பண்ணுங்க.''

**ப**ழநி உறைந்து போயிருந்தான். சொர்ணம் அவனைப் பார்க்கவேயில்லை. அவளை ஓர் அனுதாபத்துடன் பார்த்தவனுள் மெல்ல வெறுப்பு தலைதூக்கியது.

சொர்ணம்... உன் தலையெழுத்து இப்படியா போகவேண்டும்? உன்னோட அழகு என்னைக் கவர்ந்தது. நிஜம்தான். அதைவிட உன்னோட ரோஷம்தான் ரொம்பப் பிடிச்சிருந்தது. அதுதான் உன்னோட போர்க் குணம்னு நெனைச்சிருந்தேன். ஸ்டோர் மேன் உன்னைத் தொட்ட போது.. பத்ரகாளியா மாறுனியே... அதுலே பாரதியோட புதுமைப் பெண்ணைப் பார்த்தேன். நீ ஒரு புயல்னு நெனைச்சேன்.

அந்த ரோஷம் - சிலிர்ப்பு எல்லாமே போர்க் குணம்னு நெனைச்சேனே... அது தான் தப்பு. அது போர்க் குணமில்லே, நிலப்பிரபுத்துவ கர்வம். 'தான் உசந்தவன்'ங்கிற மமதை. பண்ணையார் தோரணை.

அது... மானத்துக்கான போராட்டமில்லே. மமதையிலே வெடிச்ச சீற்றம்...

இப்ப என்ன ஆகிப் போனே? போயும் போயும்... ஒரு பணக்காரனுக்கு வைப்பாட்டியாயிருந்து சீரழியப் போறே? நீ இழந்து போன வசதியான வாழ்க்கைக்காகவும், ஆடம்பர தாகத்துக்காகவும், படாடோபப்பகட்டுக்காகவும்... கேவலமான முறையிலே தரம் தாழ்ந்து... சின்ன வீடா.. இருந்து சிறுமைப்படப் போறே...

உன்னோட மாமாவும், நானும், அருந்கனையும் போட்ட முற்றுகையிலே நீ வீழ்ந்து போகலே. உனக்குள்ளேயே நீ நிலப்பிரபுத்வ ஆடம்பரக் குணத்தாலே முற்றுகை விடப்பட்டிருந்தாயே... அதுதான் உன்னை வீழ்த்தியிருக்கு...

வீழ்ச்சி... பரிதாபகரமான வீழ்ச்சி... அவலமான வீழ்ச்சி. வெட்கக்கேடான வீழ்ச்சி...

ச்சே! இப்படி ஒரு பிறவியையா... நா காதலிச்சேன்? நினைச்சாலே வெட்கமாயிருக்கு.

உள்ளுக்குள் சிந்தனை ஓடிக் கொண்டிருந்தது. சொர்ணத்தைப் பார்க்க விரும்பாமல், முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

ஒரு வெற்றி வீரனைப் போல... பணக்காரன் அருந்கனை சொர்ணத்தை ஏற்றிக் கொண்டு கம்பீரமாக ஸ்கூட்டரில் புறப்பட்டான். ஸ்கூட்டர், வழுக்கிக் கொண்டு நகர்ந்தது. சொர்ணம், அருந்கனையுடன் இழைந்தாள்.

(முற்றும்)

**சார்மினார் சானல் :**

# துறவிலும் பரவும் கட்-அவுட் கலாசாரம்!

**க**ட்-அவுட் கலாசாரத்தில் தமிழகத்தை ஆந்திரம் வென்று விடும் போலிருக்கிறது! பிரதமர் விஜயத்தின் போது இந்திரா, ராஜீவ், பிரதமர், முதல்வர் என வானளாவிய கட் அவுட்டுகள்.

இப்போது மடாதிபதிகளும் இந்த கட் அவுட்டில் நிற்க ஆரம்பித்து விட்டார்கள்! ஹைதராபாத்தில் ஸ்ரீ திரிதண்டி நாராயண ராமானுஜ ஜீயரின் கீதா பிரசங்கத் தொடரை விகாஸ தரங்கிணி என்ற இளைஞர் அணி ஏற்பாடு செய்தது. அவருக்கு ஒரு பிரம்மாண்ட கட்-அவுட்டை வைத்தார்கள்.

சுவாமிகளைப் பற்றி ஒரு வரி. பஞ்சாபில் தீவிரவாதிகளின் வன்முறைப் போராட்டம் உச்சத்தில் இருந்த போது 'அமைதி கோரி' நாற்பது வேதச் சிறுவர்களுடன் மறை ஓதியபடி பாதயாத்திரை புரிந்து அமிர்தசரஸ் அடைந்து சாதனை படைத்தவர்.

**எ**ன்னதான் சொல்லுங்கள். தெலுங்கு தேச ராஜ்ய சபா உறுப்பினர் ரேணுகா சௌத்ரிக்கு ஈடுஇணை கிடையாது. எப்படி என்கிறீர்களா?

டில்லியில் பிரதமர் வரும் வழியில் கட்டுக் காவலை மீறி ரேணுகா கார் ஓட்டினார் என்று தடுத்த டெல்லி கான்ஸ்டபிள் சூர்யவம்சிக்குப் பளிரென்று ஓர் அறை விட்டு, 'பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் மட்டுமின்றி பளிரென்று அறைவதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்' என்று ரேணுகா நிரூபித்தார். கைவரிசை மட்டுமின்றி முன்பே துப்பாக்கி வரிசையும் காண்பித்திருக்கிறார்! ஒருமுறை என்.டி.ராமாராவ் நடுத் தெருவில் உபவாசம் இருந்த போது, ஒரு சப்-இன்ஸ்பெக்டரை ரேணுகா துப்பாக்கியால் பயமுறுத்தினார்! டாக்டர் ராஜசேகர ரெட்டி என்ற காங்கிரஸ் எம்.பி.யிடம் வாய்ச்சண்டை புரியும் போது, 'கத்தை மீசை வைத்துக் கொண்டால் அத்தனை ஆம்பிளை ஆகிவிட முடியாது' என்று பட்டிமன்ற ஸ்டைலில் சொற்போர் புரிந்தார் இந்த வீர வனிதை.



● ரேணுகா சௌத்ரி

இப்போது டில்லியில் இவர் மீது போலீஸ் வழக்கு.

- சுபஸ்ரீ

பிரியா அரோரா. வடக்கிலிருந்து கோடம்பாக்கத்துக்கு இறக்குமதி செய்யப்பட்ட இவர், பம்பாயைச் சேர்ந்தவர். ஜர்னலிஸம் படித்து விட்டு மாடலிங் செய்து கொண்டிருந்த இவர், நம்ம ஊர் டைரக்டர் பவித்ரன் கண்களில் பட 'ஐ லவ் இந்தியா'வுக்கு 'புக்' ஆகி விட்டார்.

முன்பு 'இந்தியா டுடே' என்ற பெயரில் தயாரிப்பாளர் குஞ்சுமோனும் பவித்ரனும் பூஜை போட்டார்களே, அந்தப் படம்தான் இப்போது 'ஐ லவ் இந்தியா'வாகப் பெயர் மாற்றமாகியிருக்கிறது. காரணம், தயாரிப்பாளருக்கும் டைரக்டருக்கும் ஏற்பட்ட மனத் தாங்கல். அதனால் தயாரிப்பாளரையும் தலைப்பையும் மாற்றி விட்டார் பவித்ரன். ஆனால் கதையில் மட்டும் மாற்றமில்லை.

அப்படியென்ன கதை?





# தமிழுக்கு வந்த ஹிந்தி முகம்...

''எல்லாம் தீவிரவாதிகள் பற்றிய கதைதான்!'' என்கிறார் பவித்ரன்.

'ரோஜா' சாயலா?

''நோ. நோ. அதற்கும் இதற்கும் சம்பந்தமேயில்லை. தீவிரவாதத்தால் அழகான காஷ்மீர் எப்படியெல்லாம் மாறிப் போனது? அதே போல் இன்று அமைதிப் பூங்காவாக இருக்கிற தமிழகம், எதிர்காலத்தில் தீவிரவாதம் காரணமாக, வேறொரு நிலைக்கு மாற வேண்டிய நிலை ஏற்படும் போது, தமிழகத்தைச் சேர்ந்த ஒரு காவல் அதிகாரி எப்படி தேசத்தைக் காப்பாற்றுகிறார் என்பதுதான் கதை. எல்லா கமர்ஷியல் அம்சங்களையும் சேர்த்திருந்தாலும் ஒவ்வோர் இந்தியனும் இந்தியாவை நேசிக்க வேண்டும் என்பதைத் தான் அழுத்தமாகக் கூறியிருக்கிறேன்'' என்கிறார் பவித்ரன்.

கதாநாயகன் சரத்குமார். எல்லையோரக் காவல் படை அதிகாரியாக நடிக்கும் இவர், முடிந்த வரை டூப் போடாமலேயே நடித்திருக்கிறார். காஷ்மீர்ப் பகுதிகளில் மாத்திரமின்றி இந்திய-சீன எல்லைப் பகுதிகளிலும் படப்பிடிப்பை நடத்தியிருக்கிறார்கள். மைனஸ் 3 டிகிரியில் நடுங்க வைக்கும் குளிர்ப் பிரதேசங்களிலும் படப்பிடிப்பை நடத்தியிருக்கிறார்கள். இந்தப் படத்தில் வரும் இரண்டு பாடல் காட்சிகளை நெதர்லாந்தில் போய்ப் படமாக்கப் போகிறார்களாம்!

''இந்தப் படம் தமிழில் மட்டுமல்ல; அனைத்திந்திய அளவிலும் பேசப்படும் படமாக இருக்கும்!'' என்கிறார் சரத்குமார் உற்சாகத்தோடு.

ஹீரோயின் ப்ரியா அரோரா, தமக்கும் இந்தப் படத்தின் மூலம் நிறைய தமிழ்ப்பட வாய்ப்புகள் வரும் என்று நம்புகிறார். அந்த நம்பிக்கையில்தான் இப்போது அவர் வேக வேகமாகத் தமிழ் கற்றுக் கொண்டிருக்கிறார்.

– ஸ்டூடியோவாசன்



# உறவுகள்

ஒருவழியாக ஆறுமுகம் கொஞ்சம் இணங்கி வந்தான். ''சரி... நீங்களும் ஒரு அவசரத்துக்கு வயலை விக்கிறீக. திரும்பத் திரும்பப் பேசறது நல்லா இருக்காது. அன்னியமா... அசலானா... எல்லாம் ஒண்ணுக்குள்ள ஒண்ணு... ஒரே விலை... பெரிய நோட்டு நாலரைக்கு முடிச்சுரலாம். என்ன சொல்றீக?''

கணீரென்ற குரல். கண்டிப்பு. எதிராளியை மறுத்துப் பேச முடியாமல் கட்டிப் போடுகிற தோரணை. சட்டென்று ஓர் இறுகிய அமைதியைத் தோற்றுவித்தது. யாரும் பேசவில்லை.

கன்னையா அவனையே பார்த்தார். தம் சொத்தை விற்க வேண்டிய நிலைமை மனதைக் குடைந்தது.

மங்களத்தின் பக்கம் உடம்பைச் சற்றே வளைத்து, ''நல்ல ரேட்டு. முடிச்சுரலாம்'' என்றான் கப்பையா - தரகர்.

அவளுக்கு அதில் உடன்பாடு இல்லை. ''அஞ்சுக்குக் குறைஞ்சு கட்டாது. புள்ளைக்குக் கல்யாணம்னு சொல்லலையா...'' என்றாள்.

''நமக்கு ஆசைதாம்மா. மார்க்கெட் நெலவரம் அப்படி இல்லையே... இப்பல்லாம் வயல் வாய்க்கால்னு வாங்க யாரு ஆசைப்படறா... இந்த நாள்ல விவசாயம் பண்ணி லாபம் பார்க்க முடியுதா... என்னமோ சொன்னீங்களேன்னு கூட்டி வந்தேன். அப்புறம் உங்க இஷ்டம்...''

''எதுக்கும் எம் மகன் பெரியவனை ஒரு வார்த்தை கலந்துக்கிட்டு சொல்றேன்...'' என்றாள்.

''ஆமாமா... அதுவும் நல்லதுதான். செய்யுங்க...'' இருவரும் எழுந்தார்கள்.

''தம்பியும் ஒரே பிடிவாதமா நெருக்கப்படாது. ஏதோ எங்களுக்கும் முக்கிய செலவு. கொஞ்சம் இறங்கி வாங்க...'' மங்களம் பின்னாலேயே நடந்தாள்.

''அதான் நான் சொல்லிட்டேனே... நெட்டையோ குட்டையோ முடிச்சுரலாம். எதுக்கும் உங்க பதிலையும் சீக்கிரம் சொல்லிருங்க...'' ஆறுமுகம் திரும்பி நின்று பதில் சொன்னான். ''அப்ப... உத்தரவு குடுங்க. வர்றோம்மா... வர்றோம் பெரிக...''

கன்னையா தலையாட்டினார். வெளிக் கதவைத் திறந்து வீதியில் மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்தார். கிரயம் படிந்து விட்ட அறிகுறிதான் இது. உள்ளே புகைந்த வேதனை பெருமூச்சாக வெளிப்பட்டது. அப்பன் பாட்டன் காலத்துச் சொத்து. அவர்கள் கால்பட்டுச் செழித்த பூமி. தானியங்களை அள்ளிக் கொடுத்த தாய்.

''பார்த்தியா... என்ன சொல்லிட்டுப் போறானுகன்னு... எல்லாம் திருடனுக. நம்ம அவசரம் தெரிஞ்சுக்கிட்டு கழுத்துல துண்டைப் போடறானுக...'' என்றாள் மங்களம் - மகளிடம்.

நிர்மலா பதில் சொல்லவில்லை.

தன் பொருட்டுத்தானே இத்தனையும் என்பதில் அவளுக்குக் குற்ற உணர்வு இருந்தது. தவிர இதையும் விற்று விட்டு இவர்கள் என்ன செய்வார்கள் என்ற யோசனை வேறு.

''எதுக்கும் பெரியவனை ஞாயித்துக் கெழமை வரச் சொல்லி எழுதிப் போட்டுரணும்...''

யாரிடம் சொல்கிறாள் என்று தெரியவில்லை.

தூணில் சாய்ந்து கன்னையா கண்களை மூடியிருந்தார்.

''என்ன யோசனை பண்றீக?'' பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்.

**மும்தாஜ் யாசீன்**

''யோசனையா... நான் நினைக்கத்தான் நடக்கப் போவுதா?'' என்று கேட்டார்.

''கூறுகெட்டவ வயலை விக்க அலையறாளேன்னு கோவம். அதானே...''

''........''

''எனக்கு மட்டும் ஆசையா... புள்ளையக் கரையேத்தணும்... காலம் இருக்கிற இருப்புல...''

''ம்... ம்...''

''நம்ம காலம் போயிருச்சு. இதுகளாச்சும் நல்லா இருக்கட்டும். கஷ்டம் தெரிஞ்ச புள்ளைக... ஆளுக்கு ஒரு வேளை சோறு போடாதுகளா?'' அவருக்கு மட்டுமல்ல. தனக்கும் சமாதானம் சொல்லிக் கொள்கிற மாதிரி பேசினாள்.

ஆமோதிப்போ மறுப்போ இன்றி, கன்னையா மௌனமாகவே இருந்தார். போட்டியா?''

''எல்லாம் போட்டாச்சு...'' என்றாள் நிர்மலா.

கடிதம் கிடைக்க வேண்டும். கிடைத்தாலும் வருவதற்குத் தோது வேண்டும். பக்கத்து டவுனில்தான் இருந்தான். குடும்பம் குட்டி என்று ஆன பிறகு அவனுக்கும் பல வேலைகள். முன்பெல்லாம் சனிக்கிழமை மாலையே வந்து விடுவான். இப்போதெல்லாம் அப்படி இல்லை.

- ஓவர்டைம் வேலைம்மா.

- அவளுக்கு உடம்புக்கு முடியலை. அதான் வரலை.

- குழந்தைக்குத் தடுப்பூசி போடணும்மா...

உண்மை என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தாள். ''உம் பையனை டவுன்



மூடிய கண்கள் திறக்கவே இல்லை.

''எல்லாம் பெரியவன் வந்தா சரியாப் போகும்'' என்று நினைத்துக் கொண்டாள். இஷ்டம் உண்டோ இல்லையோ. மூத்த மகன் சொல்லுக்குக் கட்டுப்படுகிறவர் அவர். சுப்ரமணியம் இதமாகப் பேசத் தெரிந்தவன். ''நான் இருக்கேம்ப்பா...'' என தட்டிக் கொடுத்தால் போதும். தைரியம் வந்து விடும்.

தைரியம் - பலம். பெரிய சொத்து. மனோபலம் வந்து விட்டால் எதைத்தான் எதிர்கொள்ள முடியாது?

''ஏண்டி... உங்கண்ணனுக்குக் கடுதாசு எழுதச் சொன்னேனே... எழுதிப் சினிமா கொட்டகையில பார்த்தேன். பொஞ்சாதியோட வந்திருந்தான்'' என்று ஒரு தடவை பக்கத்து வீட்டுக்காரர் சொன்னபோது ஆச்சரியப்படும்படி இருந்தது. அந்த வாரம், தான் வெளியூர் போனதாகச் சொன்னான் சுப்ரமணி.

எதிர்பார்ப்பு என்னவோ அதன் பிறகு குறைந்து விட்டது. ''ம்... ம்... நமக்குத்தான் அதுக நினைப்பு. அதுகளுக்கு வேற எத்தனையோ நினைப்பு. சின்னஞ் சிறிசுக... இந்த வயசுலதானே அனுபவிக்கணும்... விடு...'' என்பார் கன்னையா.

ஆனால் ஒன்று. சில குடும்பங்களைப் போல சண்டை சச்சரவுகள் கிடையாது.

வருகிற நாட்களில் பழைய பிரியத்தோடு தான் நடந்து கொண்டான். தங்கைக்குப் பிடித்த பலகாரம், ''செலவுக்கு வச்சுக்க...'' என்று தன்னிடம் முடிந்ததைக் கொடுத்து விட்டுப் போவது, அப்பாவுக்கு மருந்து மாத்திரை வாங்கித் தருவது...

இந்த அளவுக்கு இருப்பதே இந்த நாளில் பெரிய விஷயம் இல்லையா.

அவளது நம்பிக்கை வீண் போக வில்லை.

**ப**ன்னிரெண்டு மணி இருக்கும். உலைக்கு அரிசி களைந்து கொண்டிருக்க வாசலில் ''அம்மா...'' என்ற குரல். தொடர்ந்து, ''அண்ணே...'' என்று நிர்மலா ஓடினாள்.

கை ஈரத்தை முந்தானையில் துடைத்துக் கொண்டு வெளியே வர, கூடத்தில் கயிற்றுக் கட்டிலில் சுப்ரமணி.

''வாய்யா...'' மங்களத்தின் கண்களும், முகமும் மலர்ந்து போயின. பிள்ளையைக் கண்ட சந்தோஷம். இனி தன் மனுஷனைச் சமாளிக்கிற கஷ்டம் விலகிய நிம்மதி.

''ஏய்யா... வசந்தாவையும் புள்ளை களையும் கூட்டிட்டு வரலாம்ல?''

''அடுத்த தடவை கூட்டியாறேன்ம்மா'' என்றான்.

பேரனின் முகம் ஒருகணம் கண்ணெ திரில் வந்து போயிற்று. மகனையே பிஞ்சு முகத்துடன் பார்ப்பதைப் போல...

பேச எவ்வளவோ இருந்தன. கல்லு வீட்டுக்காரர் பையனுக்கு நிர்மலாவைப் பெண் கேட்டு வந்திருப்பது - வயலை விற்றுக் கல்யாணம் பண்ணி விடலாம் என்ற யோசனை - அப்பாவின் உடல்நலக் குறைவு - குறிப்பாக வயலை விற்பதில் அவருக்கு இஷ்டம் இல்லாதது - கடைசியில் இதையும் சொன்னாள். ''உங்கப்பாவைச் சமாளிக் கிறது இனி உன் பாடுய்யா. மனுஷன் ரொம்பத்தான் ஆடிப் போய் கெடக்காரு. பயப்படாதே. நான் இருக்கேன்னு தைரியம் சொல்லு. உன் வார்த்தை டானிக் மாதிரி. நாளைக்கே எல்லாம் சரியாப் போகும்...'' கடைசி வார்த்தைகளைச் சற்று அழுத்தமாக - அவனது மனதை நேராகச் சென்று அடைகிற மாதிரி வெளிப்படுத்தினாள்.

எல்லாவற்றையும், ''ம்... ம்...'' என்று கேட்டுக் கொண்டு வந்த சுப்ரமணி, கண்களைச் சுழற்றிப் பார்த்து விட்டு, ''அப்பா எங்கே?'' என்றான்.

''இங்கதான் இருந்தாரு... ஏண்டி எங்கே அவரு?''

கல்யாணப் பேச்சு வந்ததும், உள்கட் டுக்குப் போய் விட்ட நிர்மலா அங்கிருந்த படியே, ''தெரியலைம்மா... டீக்கடைக்குப் பேப்பர் படிக்கப் போயிருக்கும்...'' என் றாள்.

''அதச் சொல்லு. அதான் இப்ப முக்கி யம்...'' மங்களம் சலித்துக் கொள்ள, சுப்ர மணி தாடையைத் தடவியபடி யோசித் தான். முகத்தில் நான்கு நாள் அடர்த்தி. கருங் கிய பாவனை.

''ஏன்யா... உடம்புக்குச் சரி இல் லையா?''

''ஒண்ணுமில்லைம்மா'' சுப்ரமணி முகத்தைத் திருப்பிக் கொண்டான். ஆனா லும் தன்னிடம் என்னவோ சரியில்லை என்று காட்டிக் கொள்கிற மாதிரிதான் இருந் தது அது.

''நாலு மணிக்கு நான் ஊர்ல இருக்க ணும்மா...'' என்றான் சுப்ரமணி. அப்போது மணி இரண்டு. சாப்பிட்டு கயிற்றுக் கட்டி லில் மீண்டும் உட்கார்ந்து கொண்டான்.

''முக்கியமான வேலையா?'' என்று கேட்டாள் மங்களம்.

''ம்... ஏன்?''

''இல்ல... வந்து... மாப்பிள்ளை வீட்ல வரச் சொல்லி இருக்கேன். பேச வேண்டிய தெல்லாம் இருக்கு... அதான்''

''நான் என்ன... அப்பாவும் நீயும் பேசி முடிச்சாச் சரி...''

''நல்லா இருக்கு நியாயம். உன் தங்கச் சியே இதை ஒத்துக்க மாட்டா...'' என்று சிரித்தாள் மங்களம்.

''வேலை இருக்குன்னா விடும்மா...'' என்று கடுகடுத்தான் சுப்ரமணி.

குரலில் வெளிப்பட்ட தொனி, அவளை சற்றே பின்னடையச் செய்தது. தள்ளி நிறுத்தி யது. இத்தனை கண்டிப்புடன் அவன் பேசு வது அபூர்வம். அதுவும் தங்கையின் விஷ யத்தில்...

மூத்தவள் கமலாவின் கல்யாணத்தில் ஓடியாடி அவன் வேலை செய்ததெல்லாம் ஞாபகத்திற்கு வந்தது. இப்போது யாரோ அன்னியன் போல... என்ன பேச்சு இது?

''என்னய்யா இப்படிச் சொல்றே? மூத்தவன் நீ இல்லாம நாங்க எப்படிப் பேசறது? மங்களம் நியாயம் கேட்பதைப் போல எதிரில் வர -

''எப்படி... எப்படி?'' என்று கேட்டான் சுப்ரமணி. ''மூத்தவனா... இது வயலை விக்கும்போது ஞாபகம் இல்லையாம்மா?''

கேள்வி வெடுக்கென்று கொட்டியது.

திடீரென்று முகம் கூட விகாரமாகி விட்டது.

''இன்னும் விக்கலியேப்பா... நீ இல் லாம முடியுமா... காலையில விவரம்லாம் சொன்னேனே...'' மங்களம் அவனைச் சமா தானப்படுத்துவதைப் போல ஏதோ சொன் னாள். எதற்காக அவனது கோபமென்று இன்னும் புரியவில்லை.

''என்ன சொன்னே? எனக்குப் பங்கு தரப் போறதாகவா? ம்..?'' சுப்ரமணி விஷம மாகச் சிரித்தான். ''அப்பாவுக்கு தைரியம்

சொல்ல வரணும். அதான் உன் ஆசை... அம்புட்டுத்தானே...''

திடீரென்று பெரிய வார்த்தைகளெல்லாம் வந்து விழுந்ததும் மங்களத்திற்குத் திக்குமுக்காடியது. ''என்னய்யா இது... நீயா பேசறே?'' வார்த்தைகளைக் கோவையாக வெளியிட முடியாமல் உதடுகள் துடித்தன.

''ஆமாம்மா... கஷ்டத்துல மட்டும் பங்கு... அப்பா கெடக்கட்டும். முதல்ல எனக்கு தைரியம் சொல்லு... இத்தனை வருஷம் பொழைக்க என்னத்தை மிச்சம் வச்சிருக்கீங்க... என் சம்சாரம் கேக்கறா. 'உங்க சொத்து என்ன'ன்னு. பதில் சொல்லும்மா...''

பயம் கொள்ளும்படி அவனது முகம் மேலும் இறுகியது.

மங்களத்திற்குப் புரிந்து விட்டது.

இது கோபமில்லை; வருத்தம். சொத்து கிடைக்காமல் போகிறதே என்ற ஆதங்கம். தன்னை முன்னிருத்திக் கேள்வி கேட்க எப்படி முடிந்தது? காலம் இப்படியும் மாறுமா?

ஏதோ சொல்ல வந்து, சொல்ல முடியாமல் குரல் தழுதழுக்க –

''இப்ப என்னம்மா அழுகை... இதுக்குத்தான் நான் வாயைத் திறக்கறதே இல்லை... போ...'' அதற்கும் சலித்துக் கொண்டான். சோர்ந்து உட்கார்ந்தான்.

சொத்து எதற்கு? பாதுகாப்பிற்கா? மனைவியைப் போல், நாளைக்குப் பையனும் கேட்க நேரும் போது, தன்னைக் காத்துக் கொள்வதற்கா?

அவளுடைய மனுஷன் அந்த நேரத்திலும் என்னவோ வேலையென்று வெளியே போயிருந்தார். அது எவ்வளவு நல்லதாயிற்று?

கடிகாரத்தையே திருப்பித் திருப்பி பார்த்துக் கொண்டிருந்த சுப்ரமணி பொறுமை இழந்து, ''பஸ்ஸுக்கு நேரமாச்சு... வந்தாச் சொல்லிடு... முடிஞ்சா அடுத்த வாரம் வர்றேன்...'' என்று புறப்பட்டான்.

என்ன கோபம் இருந்தாலும், வெளியூர் போகிற பிள்ளையைக் கலங்க வைத்தா அனுப்ப முடியும்? வாசல் வரை வந்த மங்களம், ''ஜாக்கிரதையா போய்ட்டு வாய்யா...'' என்று விடைகொடுத்து அனுப்பினாள்.

விசுக் விசுக்கென்று அவன் நடந்து செல்வதைக் காண, ''இதுகளுக்கு ஒரு நல்லது பண்ண முடியலையே...'' என மனம் குறுகியது. பேரனின் முகம் நினைவுக்கு வர, தன் காலத்தில் அவன் தகப்பனையோ - தாயையோ இவ்விதம் கேள்வி எதுவும் கேட்டு விடக் கூடாது என்றும் வேண்டிக் கொண்டாள்.

●● ஏராளமான வி.ஐ.பிக்களுக்கு பாஸ் கொடுக்கப்பட்டு விட்டதால் விழாக் கூடத்தின் உள்ளே இருந்தவர்களை விட பூட்டிய வாசலுக்கு வெளியே இரு மடங்கினர் அழைப் பிதழ்களோடு தவம் கிடக்க வேண்டி இருந்தது! 'இத்தகைய குழப்பம் ஏன்?' என்றபோது திரைப்பட விழாவின் டைரக்டர் திருமதி தீபக் சாந்து, ''இந்த ஆண்டின் ஏற்பாடுகள் மற்ற ஆண்டுகளை விட எவ்வளவோ மேல்!'' என்று பதிலளித்தார்!

அலங்காரமாக ஒரு பெண்மணியும் உடனிருப்பது என்ற மரபு அடிபட்டுப் போயிற்று.

●● டிம்பிள் கபாடியா, தீபா சாஹி, அவரது டைரக்டர் கணவர் கேதன் மேத்தா மற்றும் பல முக்கிய கலையுலகப் புள்ளிகளுக்கு அனுமதி மறுக்கப்பட்டு, அவர்கள் பூட்டப்பட்ட கதவுக்கு வெளியே நிறுத்தி வைக்கப்பட்டனர்! சில அதிகாரிகள் அவர்களுக்காக வாதாடிய போதும், செக்யூரிடி கார்டுகள் வன்மையாக மறுத்து விட்டனர். துவக்க விழா முடியும் தருணத்தில்தான் இவர்கள் உள்ளே வர முடிந்தது.

●● மொத்தம் காட்டப்பட

# திரைப்பட விழா:
# காற்றுப் போன பலூன்!

●● முக்கிய விருந்தினருடன் விளக்கேற்றி வைக்க வரவழைக்கப்பட்ட திவ்ய பாரதி 'செக்யூரிடி கார்டு'களால் உள்ளேயே விடப்படவில்லை. இதனால் சிப்பி விளக்கேற்றிய போது மேடைக்கு

வேண்டிய 200 படங்களில் துவக்க நாள் வரை கைக்கு வந்தவை 110 மட்டுமே. இண்டியன் ஏர்லைன்ஸ் பைலட்டுகளின் ஸ்டிரைக் காரணமாகக் கூறப்பட்டது!

●● தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தியப் படங்களில் ஒரு சிலவற்றைத் தவிர மற்றவை மிகவும் சுமார் ரகம். இது பற்றி பத்திரிகை யாளர்கள் கேட்டபோது, ''இப்போ தெல்லாம் அரசியல்வாதி யையும், போலீஸையும் கிண்டல் செய்பவை, பழிவாங்கும் காட்சிகள் கொண்ட வன்முறைச் சம்பவங்கள் நிறைந்தவை என தரங்குறைந்த படங்கள்

● 'தாராவி' ஹிந்திப் படத்திலிருந்து....





* 'ஏஸ் இன் ஹெவன்' ஐஸ்லாந்துப் படத்திலிருந்து...

வருகின்றனவேயன்றி, பாசம், காதல் இவற்றின் அடிப்படையில் பின்னப்பட்ட குடும்பக் கதை கொண்ட படங்கள் அரி தாகி விட்டன'' என்று சொல்லப்பட்டது!

●● மணி கௌல் இயக்கிய 'த இடியட்' தரமான படம் என்ற போதிலும் ஒரு நாள் தாமதமாக வந்ததால் அது ஒதுக்கித் தள்ளப்பட்டது! ஷியாம் பெனகல் இயக்கிய அந்தரானத், பாஸு பட்டாச்சார்யாவின் 'ஏக சான்ஸ் ஜிந்தகி' போன்ற சிறந்த படங் களும் ஒரு காரணமுமின்றி நிராகரிக்கப்பட்டன.

●● மற்ற விழாக்களில் ஒதுக்கப்பட்ட அயல் நாட்டுப் படங்களே அநேகமாக வந்திருந்தன. காரணம், 1989 லிருந்து விழாவின் போட்டிப் பகுதி எடுக்கப்பட்டு விட்டது. அதனால் லண்டன், கேன்ஸ், வெனிஸ், பெர்லின் போன்ற விழாக்களுக்குக் கிடைப்பது போல் தரமான படங்கள் கிடைக்கவில்லை! 'போட்டிப் பகுதி மறுபடியும் வேண்டும்' என்று பத்திரிகையாளர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள்.

●● அனேக படங்களில் சப்-டைட்டில் சரிவர பிரிண்ட் ஆக வில்லை. உதாரணமாக 'மாமா' என்ற உன்னதமான ஸினிப்படம் சப்-டைட்டில்கள் நன்றாக இருந்திருந்தால் நன்கு ரசிக்கப்பட்டிருக்கும்! நூலகராகப் பணியாற்றும் ஒரு பெண் தனது 13 வயது மன வளர்ச்சி குன்றிய மகனுடன் நடத்தும் வாழ்க்கைப் போராட்டமே கதை.

●● தமிழ் நாட்டி லிருந்து வந்த 'தேவர் மகன்', 'ரோஜா' ஆகிய இரண்டுமே 'இந்தியன் பனோரமா' பகுதியின் தரமான படங்கள் என்று பார்வையாளர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டன!

●● கிரிஷ் கர்னாட் இயக்கிய 'செலுவி' என்ற கன்னடப் படம் ஒரு கவிதை போல் பார்ப்போரை பரவசப்படுத்தியது. கல்யாணம் ஆகாத ஒரு பெண்ணைப் பற்றிய பிரச்னை, காட்டை அழிக்கும் பிரச்னை இவற்றை இணைத்து அற்புதமாகத் தயாரித்திருக்கிறார் இவர்! தேவதாசிகளின் பிரச்னையைச் சுற்றிப் பின்னப்பட்ட 'மிஸ் பியூட்டிஸ் சில்ட்ரன்' என்ற படமும் பாராட்டைப் பெற்றது. ஊட்டியில் எடுக்கப்பட்ட இந்த ஆங்கிலப் படத்தில் தமிழ் வசனங்களும் நிறைய உண்டு!



* மிஸ் பியூட்டிஸ் சில்ட்ரனில் ஒரு காட்சி....

– ராஜீவி நரசிம்மன்

# 5. வைகுந்தன் தந்த வரம்

# பாண்டியன் மகள்

தேய்ந்து போயிருந்த நிலா சற்று வளர்ந்திருந்தது. மழையும் முழுவதுமாக ஓய்ந்து இடைவெளி கொடுத்திருந்ததால் பாண்டியரைப் போல மேகங்களும் காணாமல் போயிருந்தன. வெள்ளாற்றங்கரை மணல்வெளி, சில நாட்களுக்கு முன் ரணகளமாயிருந்த அந்தப் பகுதியை நினைத்து, காற்றில் லேசாகப் புரண்டு கொண்டிருந்தது. ஆற்றில் வெள்ளமும் அடங்கி அமைதி காண, நிலா பிம்பம் வெட்டப்பட்ட வெள்ளித் தட்டாக அதில் மிதந்து கொண்டிருந்தது. தூரத்தில் தெரிந்த கோட்டையையும் அதன் உச்சியில் படபடத்த புலிக்கொடியையும் கடந்து, வெள்ளத்தில் நீந்திய காற்று தோப்பை நோக்கி வீசியது. அங்கே மணல் மேடிட்ட பகுதியில் அமர்ந்திருந்த சோழ இளவல் விக்கிரமனையும் அருகிலிருந்த அரையன் மதுராந்தகனையும் தண்ணென்று தாக்கி விட்டு மேலே சென்றது.

விக்கிரமன் வேங்கியில் சில காலம் அரசப் பிரதிநிதியாயிருந்து, சாளுக்கியருடன் மன்னர் போர் புரியச் சென்றபின் சோழ நாட்டை நிர்வகிக்க வந்து சில காலம் ஆகியிருந்தது. கால்களை மடித்துக் கட்டியிருந்த அவன் கரங்களில் முழங்கை வரையில் தெரிந்த வடுக்கள், வாட்போரில் இது வரை அவனை முழங்கைக்கு மேல் காயப் படுத்தியவர் எவருமில்லையென்பதைத் தெளிவுபடுத்தின. இவனைக் குறித்து, ''போர்த் தொழிலால் ஏனைக் கலிங்கங்கள் ஏழினையும் போய்க் கொண்ட தானைத் தியாக சமுத்திரமே'' என்று பெரும் புலவர் ஒட்டக்கூத்தர் பிற்காலத்தில் விக்கிரமச் சோழனுலா பாடப் போகிறார். அப்படிப் பட்டவனுடைய குறுகிய இடையிலிருந்து நாகத்தின் படம் போல் விரிந்த மார்பும் உரமேறிய தோள்களும் இடைவிடாத பயிற்சியை நிரூபித்தன. காகபக்ஷம் என்று புராணங்களில் வர்ணிக்கப்படுவதைப் போலிருந்த அவன் தலைக் குழல்கள் தோள் வரை நீண்டு சுருண்டு கிடந்தன. கூர்மையான அவன் விழிகளில் ஓர் அமைதியும் சாந்தமும் விரவிக் கிடக்க, ஊடே சிந்தனையும் படர்ந்து கிடந்தது. தூரத்தில் தெரிந்த மேலைமங்கலக் கோட்டையையும் அதன் உச்சியில் படபடத்த புலிக் கொடியையும் கண்டதால் லேசான மகிழ்ச்சி ரேகையொன்றும் அவன் முகத்தில் தெரிந்தது. ஒரே நாளில் பாண்டியரிடமிருந்து கோட்டையை மீட்டு, மீண்டும் புலிக்கொடி பறக்கக் காரணமாயிருந்த அரையன் மதுராந்தகன் மீது அவன் பார்வை திரும்பியது.

''மதுராந்தகா'' என்று அழைத்த அவன் குரலிலும் அன்பு சொட்டியது.

''என்ன இளவரசே?'' அரையனின் குரல் அவன் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருப்பதை உணர்த்தியது.

''பெரும் சிந்தனையில் மூழ்கியிருக்கிறாய் போலிருக்கிறதே?''

''ஆம் இளவரசே!''

''காரணம்?''

''மார்த்தாண்டனையும் மாறவர்மனையும் பிறகு சோழ நாட்டின் எந்தப் பகுதியிலும் காணவில்லை.''

''ஆம்.''

''கவி எனக்கிட்ட பணியும் இன்னும் முற்றுப் பெறவில்லை!''

''என்ன பணி அது?''

''பொறுத்தருள வேண்டும் இளவரசே. பணி நிறைவு பெறும் வரை நான் அது பற்றி எவரிடமும் பேசக் கூடாது என்பது அவர் கட்டளை.''

மெல்லச் சிரித்த சோழ இளவல், ''என்னிடம் கூடவா?'' என்றான். அரையன் பதில் திட்டவட்டமாக வந்தது.

''ஆம், இளவரசே! ஆனால் பணி நிறைவேறியதும் தமக்கும் தங்களுக்கும் உடனே ஓலையனுப்புமாறும் உத்தரவிட்டிருக்கிறார்'' என்றவன் தொடர்ந்து, ''இளவரசி திருவஹீந்திரபுரத்துக்குச் செல்வது பாண்டியனுக்கு எப்படி தெரிந்தது?'' என்று வினவினான்.

''எனக்கும் அது வியப்பாகத்தான் இருக்கிறது.''

''அரண்மனையில் யாரோ ஓர் ஒற்றன் இருக்க வேண்டும்'' என்ற அரையனை

**விஷ்வக்சேனன்**



வியப்புடன் பார்த்த விக்கிரமன், ''ஆம் மது ராந்தகா! நானும் அவ்வாறுதான் எண்ணு கிறேன்'' என்றான்.

''அந்த ஒற்றனை நாம் கண்டுபிடிக்கும் வரை அரண்மனையில் நாம் அரசாங்க விஷயங்களைப் பேசும் போது எச்சரிக்கையாக இருக்க வேண்டும்'' என்றான் அரையன்.

சற்று நேர மௌனத்துக்குப் பின் அரையன் தொடர்ந்தான் : ''இளவரசே, தப்பிச் சென்ற மாறவர்மனும் மார்த்தாண்டனும் தக்க பலத்துடன் மீண்டும் வருவார்கள். கொற்கையிலும், கோட்டாற்றிலும் காடுகளில் பாண்டியர் படை உலவுவதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.''

''நானும் கேள்விப்பட்டேன்.''

''என் சந்தேகம் உண்மையானால் பாண்டியனுக்கு உதவ சேரலாதன் படையும் கோட்டாற்றில் இருக்க வேண்டும்.''

சோழர் படையின் பிரதான ஒற்றன் ஜெயந்தன் தன்னிடம் கூறிய அதே வார்த்தைகளை அரையனும் கூறுவதைக் கேட்ட சோழ இளவல், அரையனின் ஊகத்திறனை வியந்தான்.

''மதுராந்தகா, பாண்டியர் படை திரட்ட சற்று அவகாசம் தருவோம். சாளுக்கியருடன் போர் முடிவடையும் நிலையில் இருக்கிறது. வடக்கே சென்றிருக்கும் நமது படையும் மன்னரும் திரும்பியவுடன் பாண்டியனை ஒரே நாளில் அடக்கி விடலாம்'' என்றான் விக்கிரமன்.

''அப்படியானால் ஒரு வேண்டுகோள் இளவரசே.''

''என்ன மதுராந்தகா?''

''வடக்கிலிருந்து படைகள் திரும்பு முன் நான் மன்னரைச் சந்திக்க வேண்டும்.''

விக்கிரமன் முகத்தில் வியப்புக் குறி படர்ந்தது.

''ஏன் மதுராந்தகா, மன்னர் இங்கு வந்த பின் சந்தித்தால் என்ன?''

''இல்லை இளவரசே! நான் மன்னரை அங்கேயே சந்திக்க வேண்டும். கோட்டாற்றில் திரட்டப்படும் பாண்டியர் படையையும் அவர்களுக்கு உதவும் சேரலாதனையும் ஒரே சமயத்தில் ஒடுக்க எனது திட்டத்திற்கு மன்னர் ஒப்புதலை நான் அங்கேயே பெற வேண்டும். ஏனென்றால் என் திட்டத்தின் முதற்படியே அங்கிருந்துதான் தொடங்குகிறது!''

அரையன் கூறியதிலிருந்து அவன் திட்டத்தை ஓரளவிற்கு ஊகித்து விட்ட விக்கிரமன் முகத்தில் வியப்பும் பிரமிப்பும் படர்ந்தது. மன்னருக்கு அரையன் வருவதைக் குறித்து ஓலையொன்று எழுத ஒப்புக் கொண்ட விக்கிரமன், ''கவி நாராயணை பட்டமிட்ட பணியை நீ பூர்த்தி செய்த பின் மன்னரைக் காணச் செல்லலாம்'' என்றான்.

''ஆம் இளவரசே! அந்தப் பணிக்கும் பாண்டியருடன் நடக்கவிருக்கும் போருக்கும் சம்பந்தமிருக்கிறது'' என்றான் அரையன்.

மேற்கொண்டு அதைப் பற்றி விவரம் கேட்டு அரையனைச் சங்கடத்தில் ஆழ்த்த விரும்பாத விக்கிரமன் எழுந்தான். உடன் அரையனும் எழ, இருவரும் சற்றுத் தள்ளி நின்ற புரவிகளை நோக்கி நடந்தனர்.

அரையனின் மனம் சென்ற சில தினங்களில் தன் வாழ்வில் ஏற்பட்டு விட்ட மாறுதல்களை நினைத்து வியந்தது.

சாதாரண வீரனாகக் காஞ்சியிலிருந்து கிளம்பிய தான், இளவரசியை மீட்க நேரிட்டதையும், தனது திட்டங்களின்படி பல்லவராயர் போரை நடத்தி மேலைமங்கலத்தை மீட்டதையும் எண்ணினான். அதைவிட இளவயதிலேயே பெரும் போர்களைக் கண்டவனும், வேங்கியில் ஸ்திரமான அரசை ஸ்தாபித்தவனுமான சோழ இளவல் விக்கிரமன், தனக்குச் சமமாகத் தோளில் கைவைத்து உடன் நடக்குமளவிற்கு நட்பு பாராட்டியதையும், அதன் விளைவாக அரண்மனையில் தனக்குக் கிடைத்த மதிப்பையும், மரியாதையையும் எண்ணிய அரையன், இந்த உயர்வைத் தான் பெறக் காரணகர்த்தாவான காஞ்சி வரதனை மனதார நினைத்தான்.

கங்கைகொண்ட சோழபுரம் அரண்மனையில் மகாராணி புவனமகாதேவியின் முகத்தில் ஏறக்குறைய ஒரே உருவ அமைப்பைப் பெற்றிருந்த இரு வீரர்களை ஒருசேரக் கண்டதும் மகிழ்ச்சி பரவினாலும் பொய்க் கோபம் ஒன்றும் மின்னலாகத் தோன்றியது.

''புதிதாகத் தோழன் கிடைத்தால் அதற்காக உணவைக் கூடவா மறந்து விடுவது?'' அவள் குரல்தான் கடுமையைக் காட்டியது. முகத்தில் என்னவோ பெருமை வழிந்தது.

இருவரையும் உணவருந்தும் கூடத்திற்கு அழைத்துச் சென்றவள், அங்கு அமர்ந்திருந்த அம்மங்கையைக் கண்டதும், ''பார் விக்கிரமா, இவளும் உனக்காகக் காத்திருக்கிறாள்'' என்றாள்.

விக்கிரமனைக் கண்டதும் வேகமாக ஏதோ சொல்ல வந்த அம்மங்கை பின்னால் வந்து கொண்டிருந்த அரையனைக் கண்டதும் சட்டென்று நிறுத்திக் கொண்டாள். பட்டுப் பூச்சியின் சிறகுகளைப் போல் அவள் இமைகள் படபடவென அடித்துக் கொண்டன. அவள் ஏதோ கூற வந்து நிறுத்திக் கொண்டதையும் சிவப்பேறிவிட்ட அவள் கன்னங்களையும் கண்ட விக்கிரமன் முகத்தில் முறுவல் பூத்தது.

''மதுராந்தகன் பாண்டியனை மட்டும் தான் அடக்கினான் என்று நினைத்தேன். ஒரு முறை திறந்தால் பிறகு மூடவே மூடாத அம்மங்கையின் வாயையும் அடக்கியிருக்

## அருள்வாக்கு

'முருகன்' 'முருகன்' என்பது தமிழ் நாட்டில் வழங்குகிற வெகு சிறப்பான பெயர். 'முருகன்' என்றால் 'அழகானவன்', 'என்றும் இளமை நலம் மாறாத சௌந்தர்யம் வாய்ந்தவன்' என்பதே அர்த்தம்.

அழகு என்றால் அது வெறும் சரீர அழகா? அருளின் அழகுதான் இப்படி தேக காந்தியாக வந்திருக்கிறது. பரமேசுவரன் அம்பாள் சம்பந்தத்தோடு இப்படிக் குமாரனாக ஆவிர்பவித்தபோது வீரம், ஞானம், சௌந்தர்யம் இவற்றோடு அருளிலும் அதிகப் பிரகாசத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஸத்-சித்-ஆனந்தம் என்று சொல்வார்கள். அதுதான் பரம்பொருள். இதிலே ஸத் (இருப்பு) பரமேசுவரன்; இருக்கிறோம் என்பதை உணர்ந்து சக்தியைக் காட்டுகிற

'சித்' அம்பாள்; இப்படி உணர்ந்ததில் பேரானந்தம் பிறக்கிறது. இந்த ஆனந்தமே சுப்ரமணியர். சிவம் என்கிற மங்களமும், அம்பாள் என்கிற காருண்யமும் கலந்த பரம உத்கிருஷ்டமான ஸ்தானம் அவர். சச்சிதானந்தத்தையே 'சோமாஸ் கந்தர்' என்று தமிழ் நாட்டுச் சிவாலயங்களில் எல்லாம் வைத்து உற்சவம் நடத்துகிறோம். ஈசுவரனுக்கும் அம்பாளுக்கும் நடுவே, இருவருக்கும் பொதுவான மத்ய ஸ்தான மாக, சுப்பிரமணியர் குழந்தை ரூபத்தில் இருப்பார். உமையோடும், ஸ்கந்தனோடும் கூடியவர் (ஸஹ உமா ஸ்கந்தர்) தான் ஸோமாஸ் கந்தரான பரமேசுவரன். 'பிள்ளையார்' என்று விக்நேசுவரரையே சொல்கிறபோதிலும் 'குமரன்' என்று சிறப்பிக்கப்படுகிற இளைய பிள்ளையை மட்டும் தாய் தந்தையரோடு வைத்து மூன்று மூர்த்தியாகச் செய்திருக்கிறார்கள். 'பிள்ளை என்றால் இவன் தான்' என்று எல்லோரும் பெருமைப்படுகிற மாதிரி, பிதாவே பெருமைப் பட்டுத் தோல்வியை ஒப்புக் கொள்கிற மாதிரி, இப்படி உத்தம அம்சங்கள் எல்லாவற்றிலும் உச்சமாக இருக்கிறார் சுப்ரமணியஸ்வாமி.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

கிறான் போலிருக்கிறதே!'' என்றான் விக்கிரமன்.

முகத்தை இரு கரங்களாலும் பொத்திக் கொண்ட அம்மங்கை எழுந்து உள்ளே ஓடினாள்.

''என்ன விக்கிரமா இது? உன் பரிகாசம் அவளை உணவருந்த விடாமல் செய்து விட்டது பார்!'' புவனமகாதேவி கடிந்து கொண்டாள்.

அரையன் உணவருந்தி முடிக்கும் வரை குனிந்த தலை நிமிராமல் அமர்ந்திருந்தான். அவன் மனநிலை விவரிக்க இயலாததாயிருந்தது.

**வை**குந்தப் பெருமாள் ஆலயத்தின் பெரும் மணிகள் எெழுப்பிய ஓசை காலைப் பொழுதின் இன்னிசையாக எங்கும் பரவிக் கொண்டிருந்தது. வைகுந்தன் சன்னிதியில் நீண்ட நேரம் நின்றிருந்த அம்மங்கையின் விழிகள் பெருமாளின் அபய ஹஸ்தத்தையும், பாதங்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தன. அவள் உதடுகள் வெகு நேரமாக ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருப்பதைக் கவனித்த பட்டர், அவள் ஏதேனும் பாசுரம் சொல்கிறாளா அல்லது வேறு ஏதாகிலும் கோரிக்கை விடுக்கிறாளா என்பது புரியாமல் விழித்தார்.

நீண்ட நேரத்திற்குப் பின் சன்னதியை விட்டு வெளியே வந்து அம்மங்கை வாசலைக் கடந்ததும் இதயம் படபடக்க நின்றாள். குளத்தின் படிகளில் ஏறி சன்னிதியை நோக்கி வந்து கொண்டிருந்தான் அரையன். அம்மங்கை திடீரென்று சிலையாக நின்று விட்டதையும் அவள் பார்வை நிலைகுத்தி நின்ற திசையையும் நோக்கிய தோழிகள், இளவரசியின் மனமறிந்து மரியாதையுடன் சற்று ஒதுங்கி நின்றனர்.

அரையனது நடையும் அவளைக் கண்டதும் சட்டென்று நின்று, பின்னர் தயக்கத்துடன் அவன் எதிரில் அவளைக் கொணர்ந்து நிறுத்தியது.

அம்மங்கையின் பார்வை கீழ்நோக்கித் தாழ்ந்திருந்தபோதிலும் அவன் எதிரே வந்து நிற்பதையும் அவன் பார்வை தன்னை அலசிக் கொண்டிருப்பதையும் அவள் உள்ளம் உணர்ந்து கொண்டது. அவன் திடமான பாதங்களையும் அதில் படபடத்த பட்டு வேஷ்டியின் கரையையும் கண்டு, அந்த பட்டுத் துணியா அல்லது தன் இதயமா எது அதிக வேகமாக இயங்குகிறது என்று யோசித்த போது அம்மங்கைக்குச் சிரிப்பு வந்தது.

எழுந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு, கைதேர்ந்த சிற்பியொருவன் செதுக்கி விட்டுச் சென்ற சந்தன மரச் சிற்பமாய் நின்ற அம்மங்கையைக் கண்கொட்டாமல் பார்த்த அரையன், மெல்ல ''இளவரசி'' என்று அழைத்தான்.

கரகரத்த ஆண் குரல்தான் அது. ஆனால் அது தன் இதய யாழை மீட்டியதில் எழுந்த சுநாதமாக அம்மங்கையின் செவிகளில் ஒலித்தது.

''ம்...''

''ஒரு வேண்டுகோள்.''

''என்ன அது?''

''இந்த ஆலய வழிபாடெல்லாம்...'' என்று இழுத்தவனைச் சற்றே நிமிர்ந்து நோக்கினாள் அம்மங்கை.

''என்ன அதற்கு?''

''அரண்மனையின் எல்லைக்குள்

ளேயே இருப்பது நல்லது.''

சற்று நேர உரையாடல் அவள் தயக்கத்தையும் வெட்கத்தையும் விலக்கியிருக்க வேண்டும். நன்றாகவே அவன் கண்களுடன் தன் விழிகளை உறவாட விட்டவள், அவன் தன்னை விழுங்கி விடுவதைப் போல் பார்ப்பதை உணர்ந்தாள்.

''ஏன்?''

''எதிரிகள் எங்காவது பதுங்கியிருக்கலாம். மறுபடியும்...''

'ஒருமுறை நேர்ந்த அவமானமே போதும்' என்று வெட்கமடைந்தாலும் அதை மறைத்துக் கொண்டு, ''அவர்கள் முயற்சிகளை முறியடிக்க ஒரு சோழ வீரர் எனக்கு இருக்கிறார்'' என்று சொன்ன அம்மங்கை, தன் விழிகளைத் துணிவுடனே அவன் கம்பீர மேனி மீது படர விட்டாள்.

இதைவிட வெளிப்படையாக அவள் தன் மனத்திலிருப்பதை உணர்த்த இயலாதென்பது அரையனுக்குத் தெளிவாகவே புரிந்தது. ஆனாலும் அவன் முகத்தில் மெலிதான சோகமே பரவியது.

''அந்த வீரன் எப்போதும் உடனிருக்க இயலாதே!''

''ஏன்?'' - அவள் முகம் சட்டென்று கலக்கத்தைக் காட்டியது.

''நாளை நான் பொதிகைக் கூற்றத்திற்குக் கிளம்ப வேண்டும், கவி எனக்கிட்ட பணியைப் பூர்த்தி செய்ய'' என்றான் அரையன்.

அவள் முகம் கூம்பிய கமலமாயிற்று.

சற்று நேரம் மௌனம் சாதித்த அரையன் தொடர்ந்தான்.

''இளவரசி!''

''ம்...''

''நான் சாதாரண வீரன். நீங்கள் மன்னர் மகள்...'' அவன் முடிப்பதற்குள் அவனைக் கட்டு விடுவது போல் நீர்த்திரைக்குள் ளிருந்து பார்த்தன அவள் விழிகள். ஏற்கெனவே சிவந்திருந்த அவள் முகம் கோபத்தில் மேலும் சிவந்தது. ஏதோ சொல்லத் துடித்த உதடுகளை உள்வாங்கி மடித்துக் கொண்டவள், அவனை மீண்டும் ஒருமுறை ஏறிட்டு நோக்கியபின் விடுவிடுவென்று வாசலை நோக்கி நடந்தாள்.

இளவரசியையும் தோழிகளையும் ஏற்றிக் கொண்டு புழுதி பறக்கச் சென்ற ரதத்தையே சற்று நேரம் பார்த்துக் கொண்டு நின்ற அரையன், பின்னர் திரும்பி, சன்னதிக்குள் நுழைந்தான். தன் மகிழ்ச்சியையும், சோகத்தையும் நிர்ணயிக்கும் வைகுந்தனின் பாதங்களில் தன் மனதில் பொங்கிய எண்ணங்களையும், வாழ்வையும் அர்ப்பணம் செய்து நீண்ட நேரம் நின்றான்.

அப்போது அங்கு வந்து சேர்ந்த ஜெயந்தன் முகத்தில் பரபரப்பு இருந்தாலும் வழிபாட்டுக்கு இடையூறு செய்யாதிருந்தான். சன்னதியிலிருந்து அரையன் வெளியே வந்ததும், ''தங்களுக்காக அமைச்சரும் இளவரசரும் காத்திருக்கிறார்கள்'' என்றான்.

அடுத்த அரை நாழிகையில் ஜெயந்தனுடன் கிளம்பி அரண்மனையை அடைந்து அமைச்சர் முன் நின்றிருந்தான் அரையன்.

''வா மதுராந்தகா'' என்று வரவேற்ற அமைச்சரின் குரலில், அரையன் அதுவரை காணாத கலக்கம் காணப்பட்டது. ஓர் ஓலையை எடுத்து நீட்டினார் பேரமைச்சர். வழக்கமாகச் சோழ ஒற்றர்கள் அனுப்பும் ரகசிய முத்திரையுடனிருந்தது அந்த ஓலை.

''பேரமைச்சருக்கு வணக்கம். குமரிக்கருகே நமது கலங்கள் தாக்கப்பட்டன. உதவிக்குச் சென்ற நமது போர்க் கலமும் தாக்கப்பட்டது. தாக்கியவர் சேர வீரர்களா, ஈழத்து வீரர்களா என்பது தெரியவில்லை. அருகில் எங்கோ கடற்படைத் தளம் இருக்க வேண்டும்.''

ஓலையில் கையொப்பமொன்றும் முத்திரையுமிருந்தன..

''என்ன ஆணவம்! என்ன துணிச்சல்!'' விக்கிரமன் கோபத்துடன் உலவினான்.

''இளவரசர் அமைதி காட்டுமாறு வேண்டுகிறேன்'' என்றார் பேரமைச்சர்.

''அமைச்சரே, நாளை நான் பொதிகைக் கூற்றத்திற்குப் புறப்படுகிறேன். அங்கு என் பணியை முடித்துக் கொண்டதும் சேரன் தளத்தை நானே கண்டறிந்து வருகிறேன். என் ஓலை கிடைக்கும் வரை தயைகூர்ந்து எந்த நடவடிக்கையும் எடுக்க வேண்டாம்'' என்றான் அரையன்.

ஒப்புதலுக்கு அடையாளமாகத் தலையசைத்த அமைச்சர், ''மதுராந்தகா இந்த வாளை மாற்றிக் கொள்'' என்றார்.

அமைச்சரைத் திடுக்கிட்டு நோக்கினான் அரையன் மதுராந்தகன்.

''பாண்டியன் மறைந்திருப்பதானால் சேர நாட்டில்தான் மறைய வேண்டும். சேரலாதன் உதவியும் அவனுக்கிருக்கிறது. உன் வாளின் கீர்த்தி ஏற்கெனவே எங்கும் பரவிவிட்டது. மேலும் ஒற்றனாகச் செல்பவனுக்கு இத்தனை நீண்ட வாள் ஒரு சுமை', என்றார் அமைச்சர்.

அமைச்சர் கூறியதில் உள்ள உண்மை அரையனுக்குப் புரிந்தது. அவன் விழிகளில் அதுவரை காணாத வருத்தம் நிறைந்தது. வாளைக் கழற்றி இளவரசனிடம் ஒப்படைத்த அரையன், தன் இருப்பிடத்தை நோக்கி கனத்த மனத்துடன் நடந்தான்.

பொதிகைக் கூற்றம் என்பது உண்மையிலேயே எமனின் இருப்பிடம் போன்றது தான் என்று கேள்விப்பட்டிருந்த அம்மங்கையின் நீர்த்திரையிட்ட விழிகள், சாளரத்தின் வழியே விடைகொடுக்க, ஜெயந்தனுடனும், தேர்ந்தெடுத்த சில வீரர்களுடனும், அன்று இரவிலேயே தென்பொதிகை மலையில் சேரன் எல்லைப்புறத்துக் கோட்டையான பொதிகைக் கூற்றத்தை நோக்கிக் கிளம்பினான் அரையன் மதுராந்தகன்.

(தொடரும்)



# பஞ்சவர்ணம் ஏன்

**உத்தமசோழன்**

ஏதாவது குடித்தால் தேவலாம் போலிருந்தது செந்திலுக்கு.

காலை ஒன்பதரைக்கு அலுவலகத்திற்குள் நுழைந்ததிலிருந்து இந்தப் பதினொன்றரை வரை கசக்கிப் பிழிந்த வேலைப் பளு காரணமா...? அல்லது அந்தப் பஞ்சவர்ணத்தைப் பார்த்து 'என்னம்மா... பெரிசா என்னவோ சொன்னே... இப்போ உம் புருசன் உன் வீட்லேதான் இருக்கான் போலிருக்கு...!' என்று அவளிடம் கேட்க வேண்டும் என்கிற தவிப்பா...?

யோசித்தால் குழப்பம்தான்.

இருந்தாலும் ஏதாவது ஒரு குளிர்பானம் வயிற்றுக்குள் போனால்தான் உடம்புக்குள் மீண்டும் கறுகறுப்பு வரும் போலிருந்தது.

இஞ்சியும், எலுமிச்சையும் கலந்து, கற்கண்டுக் கட்டிகளாய் ஐஸ் கட்டிகள் கொட்டப்பட்ட கரும்புச் சாறு ஜிலுஜிலுவென்று வயிற்றுக்குள் இறங்கும் போதே சோர்வும் களைப்பும் தப்பித்தோம், பிழைத்தோம் என்று ஓட்டம் பிடிக்காதா என்ன...?

அது மட்டும் தான் இன்று கரும்புச் சாறு குடிக்க வேண்டும் என்று நினைப்பு வரக் காரணமா...?

இதுவரை அதுதான் காரணம். இன்று வேறு காரணம்.

பெரிய கடை வீதியில் நாலைந்து கரும்புச் சாறு வண்டிகள். ஆனாலும் பஞ்சவர்ணத்தின் வண்டிக்குத்தான் திருவிழாக் கூட்டம் போல் கூடும். வயசாளிகள் முதல் அரை நிஜார் வரை அத்தனை பேரும் பஞ்சவர்ணத்தின் கடைக்குத்தான் வாடிக்கையாளர்கள். மற்ற கரும்புச் சாறு கடைகள் துடைத்து விட்டதைப் போலிருக்கும். மற்ற கடைக்காரர்கள் அத்தனை பேரின் கண்களும் பஞ்சவர்ணத்தின் கடையைக் கட்டெரிக்கும் ஆத்திரத்துடனும், பொறாமையுடனும் பார்த்தபடி இருக்கும்.

மணி அடித்த மாதிரி காலை பத்து மணிக்கெல்லாம் பஞ்சவர்ணம் பெரிய கடைத் தெருவில் பிரவேசம் செய்வாள். ஒரு கையில் ஐஸ் பெட்டி... மறு கையில் எலுமிச்சம்பழப் பை. அவளது கணவன் வேலுச்சாமியின் தலையில் தோல் சீவப்பட்ட வளப்பமான கரும்புக் கழிகள்.

அவர்களின் அந்த வீதி வலம்... 'சீக்கிரம் வாங்க... கரும்புச் சாறு ரெடி...!' என்று கடைத் தெருவாசிகளை அழைக்காமல் அழைக்கும்.

பஞ்சவர்ணத்தின் கடை என்பது ஒரு ஜவுளிக் கடையின் எதிரில் வீதியின் ஓரம் தான். மேலே வண்டியில் நான்கு முனைகளிலும் நிறுத்தப்பட்டிருக்கும் மரச் சட்டத்தின் மேல் விரிக்கப்பட்டிருக்கும் பிளாஸ்டிக் தாள்தான் கூரை.

வண்டியருகே போனதும் விளக்குமாற்றை எடுத்துப் பரபரவென்று சுற்றிலும் கூட்டிச் சுத்தம் செய்து, மிஷினைத் துடைத்து, கண்ணாடித் தம்ளர்களைக் கழுவி, வாளியில் புதிய தண்ணீர் நிரப்பி பூப் போட்டு, பத்தி கொளுத்தி வைத்து 'புள்ளையாரப்பா... என்னிக்கும் போல இன்னிக்கும் யாவாரம் நல்லா இருக்கணுமடாப்பா...' என்று மனசுக்குள் வேண்டிக் கொள்வதற்கும், அவள் புருஷன் ஐஸ் பாரை வாங்கி வருவதற்கும் சரியாக இருக்கும்.

ஐஸை உடைத்து ஐஸ் பெட்டிக்குள் கொட்டி மூடி வைத்து விட்டு, 'ஆரம்பிக்கலாமா... பஞ்சவர்ணம்...?' கண்ணாலேயே அனுமதி கேட்பான் வேலுச்சாமி.

'ஹூம்...' கண்ணசைவின் மூலமே உத்தரவிடுவாள் அவள்.

மனத்திற்குள் பிள்ளையாரை நினைத்துக் கொண்டபடியே முதல் கரும்பை எடுத்து மிஷினுக்குள் கொடுத்துக் கொண்டு, மறு கையால் கைப்பிடியைப் பிடித்துச் சுற்றுவான். எதிரில் நின்றபடி பஞ்சவர்ணம் வேலுச்சாமியிடமும், பஞ்சவர்ணத்திடமும் ஒரு வியாபார விசேஷம் உண்டு.

''பஞ்சவர்ணம்...!''

''மாமா...!''

''வந்திருக்கிறது யாரு...?''

''ஜவுளிக் கடை முதலாளி...!''

அவன் ஜவுளிக் கடையில் புதிதாக வேலைக்குச் சேர்ந்து, இவசரி இட்டு வாங்கிக் கொண்டிருப்பவனாயிருப்பான்.

''அவர் நம்ப கடையிலே கரும்புச் சாறு குடிச்சா...?''

''நமக்குப் பெருமை... ஐயாவுக்குக் குளுமை...''

இப்படி ஒவ்வொரு வாடிக்கையாளரையும் அவரவருக்குத் தகுந்தாற்போல் கேள்வி பதிலால் சிரிப்பும், கொம்மாளமுமாய்க் குளிப்பாட்டிய பிறகு, கரும்புச் சாறால் குளிப்பாட்டுவார்கள்.

இவர்களுக்கு வியாபாரம் முடிந்த பிறகுதான் மற்றவர்களுக்கு வியாபாரம்.

பொடிப் பயல்களுக்கு எப்போதுமே பஞ்சவர்ணத்தின் கடையில் தனிச் சலுகை உண்டு. இருக்கிற காசைக் கொடுத்தால் போதும், முகம் கோணாமல் முழுக் கிளாசாகக் கொடுத்து விடுவாள். அந்தப் பயல்கள் ஒருநாள் கூட ஐம்பது பைசாவிற்கு மேல் கொடுத்தது கிடையாது. அவளும் அதைப் பற்றிக் கவலைப்படுவது கிடையாது. அவளது கல்லாப் பெட்டி குறைவதும் கிடையாது.

**யா**ர் கண் பட்டதோ தெரியவில்லை. பஞ்சவர்ணத்துக்கும், வேலுச்சாமிக்கும் பிரச்னை வந்தது. பிரச்னைக்குக் காரணமானவள் கரும்புத் தோட்டத்தில் வேலை செய்த பாஞ்சாலி... புருஷனைப் பறி கொடுத்தவள். தகப்பனின் ஆதரவில் இருப்

# அப்படிச் சொன்னாள்?

கரும்பை இழுப்பாள். தேனாய்ச் சாறு கொட்டும். அஞ்சாறு கரும்பைப் பிழிந்ததும் ஜாடியில் வடிகட்டி ஊற்றி மூடி வைத்து விட்டு வரிசையாக கண்ணாடித் தம்ளர்களை எடுத்துப் பரப்புவான்.

அவள் ஐஸ் கட்டிகளை அள்ளி ஒவ்வொரு கிளாஸிலும் ஒரே சீராகக் கொட்டுவாள். அவன் கரும்புச் சாறை நிரப்ப... அவள் எலுமிச்சம் பழச் சாற்றையும், இஞ்சிச் சாற்றையும் கலப்பாள்.

அவன் ஸ்பூனால் கலக்கி முடிப்பதற்குள் கூட்டம் ஈக்களாய் மொய்த்திருக்கும்.

பவள். துணை தேடிக் கொண்டிருந்தவளுக்குக் கண்ணில் பட்டவன் வேலுச்சாமி.

அடிக்கடி கரும்பு வாங்க வந்தவனிடம் சிரிக்கச் சிரிக்கப் பேசினாள். சிணுங்கினாள். உடம்பால் சேஷ்டைகள் செய்தாள். அவளது முயற்சிக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் பலன் கிடைத்தது.

வேலுச்சாமிக்கு பஞ்சவர்ணத்தை விட பாஞ்சாலி மேலானவளாகத் தோன்றினாள்.

விளைவு...

''காலையிலே போய்க் கரும்பை வெட்டிக்கிட்டு வர்றதுக்கு நேரமாயிடுது பஞ்சவர்ணம்... நமக்குத்தான் அங்க மணிக்

கெல்லாம் யாவாரம் முடிஞ்சிடுதே... சாயங்காலமே வயலுக்குப் போயி கரும்பை வெட்டியாந்திடுறேன்...''

இப்படி பஞ்சவர்ணத்திடம் சொல்லி விட்டுக் கரும்புக் கொல்லைக்குப் போனவன், அகாலங்களில் வீடு திரும்பத் தொடங்கினான்.

ஒரு நாள் இரவு வீடு திரும்பிய வேலுச்சாமியை வாசலிலேயே தடுத்து நிறுத்தினாள் பஞ்சவர்ணம்.

''இனி நீ உள்ளே வர வேண்டாம். உனக்குப் புடிச்சவளோடேயே நீ இருந்துக்கோ.. இது என் அப்பாவோட வீடு... சரியோ... தப்போ... எனக்கு ஒரு புள்ளையைக் கொடுத்துட்டே... பரவாயில்லே... அதை நானே வளத்துக்கிறேன். வீட்டுக்குள்ளே போயி உனக்குன்னு சொந்தமா ஏதாவது வச்சிருந்தா அதை எடுத்துக்கிட்டு வெளியே போயிடு...''

வேலுச்சாமி ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

''ஏதாவது பேசினா நான் மனுஷியாவே இருக்க மாட்டேன். அவ்வளவுதான் என்னாலே சொல்ல முடியும்.''

திகைத்துப் போய்க் கொஞ்ச நேரம் வாசலிலேயே நின்றான், வேலுச்சாமி. மனசில் என்ன தோன்றியதோ கரும்புக் கொல்லைக்காரி வீட்டுக்கே ஒரேயடியாய்ப் போய் விட்டான்.

அவன் போன பிறகு ஒரே ஒரு நாள் மட்டும் வீட்டிற்குள்ளேயே யோசித்தபடி படுத்திருந்தாள் பஞ்சவர்ணம்.

''யாரை நம்பியும் இந்த உலகத்திலே நாம பொறக்கலே.. நம்மைப் பெத்த அப்பனே போயிட்டான்... நாம என்ன செத்தா போயிட்டோம்...? ரெண்டு நாள் அழுதோம். அப்புறம் சோறு திங்காம தூங்காம, சிரிக்காமலா இருந்துட்டோம். பெத்த அப்பனுக்கே அப்படீன்னா, ஒழுக்கமில்லாத கணவனுக்காக நாம ஏன் இடிஞ்சு போவணும்...''

மறுநாள் கடையைத் திறந்து விட்டாள்.

கூட்டம் எப்போதும் போல் கூடத்தான் சய்தது. அவளும் சிரிக்கச் செய்தாள்... பேசச் செய்தாள்... வியாபாரமும் செய்தாள்.

இரண்டு பேராகச் செய்த வேலையை ஒருத்தியாகவே செய்யக் கஷ்டமாக இருந்தது. போகப் போக அதுவும் பழக்கப்பட்டு விட்டது.

'வேலுச்சாமி என்ன ஆனான்?' என்று கேட்க வாடிக்கையாளர்களுக்கு ஆசைதான்! 'என்ன சொல்வாளோ...?' என்ற பயம் வந்து தடுத்ததால் யாரும் கேட்கத் துணியவில்லை.

செந்தில் ஒருநாள் கேட்டே விட்டான்.

''வேலுச்சாமி எங்கே பஞ்சவர்ணம்...? தனியாக் கிடந்து சிரமப்படறே...!''

ஒரு வினாடி அவனை எரித்து விடுவதைப் போல பார்த்தாள். பிறகு தலையைத் தாழ்த்திக் கொண்டாள். சற்று நேரம் பொறுத்து அமைதியாகச் சொன்னாள்.

''செத்துட்டாரு...''

விக்கித்துப் போனான் செந்தில்.

''அப்படியா...!'' கொஞ்ச நேரம் பேச்சு வரவில்லை செந்திலுக்கு.

''யார்கிட்டேயும் சொல்லலையே நீ...?''

''சொல்லிக்கிற மாதிரியான சாவு இல்லே அது...!''

புரியவில்லை.

''என்ன சொல்றே நீ... புதிர் போடற மாதிரில்லே இருக்கு...''

''பொண்டாட்டி உசிரோட இருக்கிறப்போ இன்னொருத்தியோட போறவன், பொண்டாட்டியைப் பொறுத்தவரைக்கும் செத்துப் போனவன்தானே...?''

உண்மை இப்போதுதான் கட ஆரம்பித்தது செந்திலுக்கு.

'இவளை விட்டுட்டுப் போறதுக்கு எவனுக்காவது மனசு வருமா என்ன...?' அவனுக்குள் ஆச்சரியமும் ஆத்திரமும்.

''நான் அந்த ஆளுக்கு எந்தக் குறையும் வச்சதில்லே... இப்படி அவரு செய்வாருன்னு கனவிலே கூட நினைச்சதில்லே...'' பஞ்சவர்ணத்தின் விழி ஓரங்களில் நீரின் பளபளப்பு.

அவன் அவளைச் சமாதானப்படுத்த முயன்றான்.

''ப்ச்... முட்டாள்... கொஞ்ச நாள்லே பாரு... மறுபடியும் திரும்பி உங்கிட்டேயே வரத்தான் போறான்... நீயும்...''

---



"ஒரு கோட்டு தைப்பதற்கு ஒரு மாசமா? கடவுள் இந்த உலகத்தையே ஆறு நாளில் படைச்சிட்டார் தெரியுமா?"

"உலகம் இப்ப எவ்வளவு மோசமா இருக்கு பார்த்திங்களா? அவசரப்பட்டா அப்படித்தான்!"

- ஆர். பிரகாசம்

நெருப்புச் சுட்டது போல் திடுக்கிட்டாள்.

''அதுக்கு வேற ஆளைப் பாருங்க... சாரு... என்னைப் பொறுத்த வரைக்கும் அந்த ஆளு செத்தவர்தான்... செத்தவன் என்னைக்காவது பொழைச்சதுண்டா...?''

அவள் பதிலில் இருந்த வைராக்கியம் அவனைத் திகைக்க வைத்தது.

செந்தில் பஞ்சவர்ணத்தின் கடைக்குப் போன போது, அதிர்ஷ்டவசமாக இரண்டொருவரே நின்றிருந்தனர். அவர்களும் போகட்டும் என்று காத்திருந்து, குடித்து முடித்த கிளாஸை அவள் கையில் கொடுத்து விட்டுச் சொன்னான்.

''என்ன பஞ்சவர்ணம்.... அன்னைக்கு 'என்னைக்கிருந்தாலும் உம் புருசன் உங்கிட்டத்தான் வருவான்'னு சொன்னதுக்கு... 'அதுக்கு வேற ஆளைப் பாருங்கன்னு' ரொம்ப வீராப்பாப் பேசினே... காலையிலே பஸ்லே வர்றப்ப பார்த்தேன். உன் புருசன் உன் வீட்டுத் திண்ணையிலே உக்காந்திருந்தான்...''

''தப்பாச் சொல்றீங்க... சாரு...''

செந்தில் அவளை ஏளனமாகப் பார்த்தான். ''எனக்குக் கண்ணு நல்லாவே தெரியும் பஞ்சவர்ணம். என் ரெண்டு கண்ணாலேயும் பார்த்தேன். வேலுச்சாமிதான் உக்காந்திருந்தான்...''

''இப்ப சொன்னதுதான் சரி...'' பஞ்சவர்ணம் தெளிவாய்ச் சொன்னாள்.

செந்தில் குழம்பினான்.

''என்ன சார் அப்படிப் பாக்குறீங்க...? என் வீட்டுத் திண்ணையிலே உக்காந்திருந்த ஆளு... என்னோட புருசன் இல்லே... அவர் தான் எம் மனசுக்குள்ளே செத்துப் போய் ரொம்ப நாளாச்சே சாரு... செத்தவங்க என்னைக்காவது பொழைச்சதுண்டா...? ஆனா நீங்க ரெண்டாவதாச் சொன்னீங்க பாருங்க, வேலுச்சாமின்னு... அவரு உக்காந்திருந்தது வாஸ்தவந்தான். அந்த மனுசனுக்கு லாரியிலே அடிபட்டுக் காலு போயிடுச்சு. காலு போனப்புறம் அவர் கிட்ட ஒண்ட வந்தவளுக்கு அந்த ஆளு வேண்டாதவராப் போயிட்டாரு. அதனாலே அவருக்கு இப்ப ஒண்ட இடம் தேவைப்பட்டிருக்கு. இங்கே வந்துட்டாரு நான் சோறு போடுவேன்கிற நம்பிக்கையிலே.

''முன்னே பின்னே தெரியாத எத்தனையோ போக்கத்த அனாதைங்களை நினைச்சு இரக்கப்படறதில்லையா.. நடக்க முடியாதவங்க... சோத்துக்கில்லாதவங்களைப் பார்த்து, 'ஐயோ பாவம்'னு நினைக்கிறதில்லையா... அது மாதிரிதான் எனக்கு இந்த ஆளும்... சரி.. தொலையட்டும்னு' இருந்துட்டேன்.. அவ்வளவுதான்!''

பஞ்சவர்ணம் தெளிவாகச் சொன்னாள்.



மனைவி : என்னங்க நம்ம குழந்தையோட தொட்டிலை வெளியே காய வைக்க வேண்டாம்னு எத்தனை தடவை அடிச்சுக்கிட்டேன்; கேட்டீங்களா? இப்பப் போய்ப் பார்த்தால் அரசுத் தொட்டில் மாதிரி அதில் ஒரு குழந்தை கெடக்குதே!''

– எஸ். பொன்னுசாமி



''எங்கப்பா ஒரு சினிமாப் பைத்தியம்!''

''ஓகோ...! சினிமா நிறைய பார்ப்பாரா?''

''இல்லே... சினிமா எடுத்ததனால பைத்தியமானவரு!''

- வி. பி. மகராசி

''தலைவர் கோபமா போலீஸ் ஸ்டேஷன்லேர்ந்து பேசிட்டு வர்றாரே, என்னவாம்?''

''வட்டத் தலைவர்லேர்ந்து மாவட்டத் தலைவரான பிறகும் பழைய கேடிலிஸ்ட்லேர்ந்து அவரோட போட்டோவை இன்னும் எடுக்கலையாம்!''

- தஞ்சைத் தரணியன்



# ரேஷன் அரிசி விலை உயர்ந்து விட்டதே?

● கே. மணிகண்டன், நாகர்கோயில். ❒

? *நாகர்கோயில் சப்ஜெயிலில் போலீஸ் காரர் ஒருவர் ரவுடிகளால் கொல்லப் பட்டது குறித்து?*

! காந்திஜி ராம ராஜ்யம் மலர விரும்பி னார். அதை மறந்து நமது தலைவர்கள் போலீஸ் ராஜ்யம் அமைக்க எண்ணி னார்கள். விளைவு, இன்று அது ரவுடிகள் ராஜ்யமாக மாறி வருகிறது!

● கண்ணம்மா இராமசாமி, திருச்சி.

? *கல்கத்தாவின் அஷாருத்தீன்?*

! காப்டன் பதவிக்கு வந்த ஆபத்து நீங்கியது. தக்க வைத்துக் கொண்டு விட் டார்!

● பி. ராஜசேகரன், மதுரை.

? *'வோட்டு மட்டுமே முக்கியம் என்று கருதக் கூடாது' என காங்கிரஸ் தலைவர் மூப்பனார் கூறியிருப்பது பற்றி?*

! அதுதான் அவருக்கும் கட்சிக்குள்ளேயே அவரை எதிர்ப்பவருக்கும் இடையில் உள்ள முக்கிய வேறுபாடு.

● எஸ். வேங்கடாசலம், நாட்டரசன் கோட்டை.

? *'தொண்டிக் குதிரையான காங்கிரஸ் வண்டி குதிரையாக முடியாது' என்கிறாரே செங்கோட்டையன்?*

! ஜாக்கி இல்லையென்றால் அ.தி.மு.க வும் வண்டிக் குதிரைதான்!

● ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்.

? *தியாகராஜர் கீர்த்தனைகளைத் தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையம் தமிழாக்கம் செய்கிறதாமே?*

! பாடுவதற்கேற்ற தமிழாக்கம் என்றால், 'தமிழில் கீர்த்தனைகளுக்கு வறட்சியா?' என்ற கேள்வி எழும். அப்படியில்லை. அர்த்தம் தெரிவதற்கான தமிழாக்கம் என்றால் ஏற்கெனவே டி. எஸ். பார்த்தசாரதி செய்து விட்டார். எனவே அநாவசிய வேலை.

● மு. ரவிச்சந்திரன், சேலம்.

? *ஜெ. அரசு ரேஷன் அரிசி விலையை உயர்த்தி விட்டதே?*

! எல்லாப் பண்டங்களின் விலைகளும் ஏகமாக உயர்ந் திருக்கும் போது இந்த விலை ஏற்றத்தையும் ஓர ளவு புரிந்துகொள்ளக் கூடிய வர்கள் கூட, அதற்காக ஜெ அரசு கூறும் சமாதா னங்களையும், சால் ஜாப்புகளையும், புகார் களையும் கேட்டு அருவருப் படைகிறார்கள்.

● வீ. சோழன், செம்போடை.

? *மூப்பனாரின் ஒற்று மைக்கான அறைகூவல் குறித்து...?*

! கைகுலுக்க அவர் கரம் நீட்டினால் வாழப்பாடியார் அதில் ரேகை ஜோஸியம் பார்த்து முகம் சுளிக்கி றாரே!

● பி. அன்புச்செல்வன், கொச்சி.

? *சினிமா படம் எடுக்கும் செலவைக் குறைக்க விநி யோகஸ்தர்களும் சினிமாக் காரர்களும் சேர்ந்து முடி வெடுத்திருக்கிறார்களே?*

! டீவி, வீடியோ போட் டியைச் சமாளிக்கக் குறைந்த செலவில் படம் எடுக்கும் வழிகளை ஆராய வேண்டி யதுதான். ஆனால் அதற்காக சூப்பர் ஸ்டார்களைப் பார்த்து "ஊதியத்தைக் குறைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறுவது அபத்தம். நட்சத்திரங்களுக்கு டிமாண் டுக்கு ஏற்ப ரேட் அதிகரிக் கிறது. நாளை ரஜினி, கம லுக்கு மக்களிடையே மவுசு இல்லை என்றால் யார் அவர்களைச் சீந்துவார்கள்? குறைந்த பட்ஜெட் படம்

* 'வோட்டு முக்கியமல்ல'



* வண்டிக் குதிரை



* அரிசி விலை
* உயர்வு



* ஹிந்தி எதிர்ப்பு



* இந்திய...

* ...விஜயம்









* டிமாண்டுக்கு... * ...ஏற்ப ரேட்!

எடுப்பவர்கள் சூப்பர் ஸ்டார்களை விட்டு விட்டு வேறு நடிகர்களைத் தேடிப் போக வேண்டியதுதான். 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்' என்பதற்கு ஏற்பத்தான் ஒவ்வொரு நட்சத்திரமும் தமது பாபுலாரிடிக்கு ஏற்பப் பணம் கேட்பார்.

● ஆர். விஜி, அரகண்டநல்லூர்.

*? தினமணியின் புதிய ஆசிரியர் பற்றி?*

! வாழ்த்துக்கள்.

● காழி சாமா, தென்பாதி.

*? திருமுருக கிருபானந்த வாரியாரை அறுபத்து நான்காவது நாயன்மாராகச் சேர்த்து விட்டது குறித்து?*

! கொஞ்சம் இருங்கள், இதே 64வது இடத்துக்குக் குன்றக்குடி அடிகளாரும் போட்டியிடுவதாகக் கேள்வி!

● கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

*? மீண்டும் இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடத்தப் போவதாகக் கருணாநிதி அறிவித்திருக்கிறாரே?*

! ஜெ. மீது லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்கள் சுமத்தும் பணியை சு. சுவாமி அவரிடமிருந்து பிடுங்கிக் கொண்டு விட்டதால், கருணாநிதிக்கு மிச்சமிருப்பது இது ஒன்றே.

● இரா. ரெங்கசாமி, வடுகபட்டி.

*? இப்போது எந்தக் கட்சியில் அதிகமான குழப்பங்களும் தவிப்புக்களும் பெருகியுள்ளன?*

! எல்லாக் கட்சிகளுமே இதில் முதலிடத்துக்குத்தான் போட்டியிடுகின்றன. ஆனாலும் காங்கிரஸ் ஆட்சியில் இருப்பதால் நமக்கு அது குறித்துத்தான் கவலை அதிகமாக இருக்கிறது.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

*? கோர்பசேவ் ஆட்சியைக் கவிழ்க்கச் சதி செய்தோர் மீது விசாரணையாமே? அப்படி பார்க்கப் போனால் இரண்டாவது முயற்சியில் யெல்ட்சின்தானே அவரைக் கவிழ்த்தார்?*

! கவிழ்ப்பது வேறு; கவிழ்க்கச் சதி செய்வது வேறு, மிஸ்டர் கல்யாணசுந்தரம்.

● கி. ராமதாஸ், சென்னை - 23.

*? ஜான்மேஜரின் இந்திய விஜயம் பற்றி?*

* 64 வது.... * இடத்துக்குப் போட்டி!





! லண்டனிலே இருந்த எதிர்ப்பையும், சுமத்தப்பட்ட அவதூறுகளையும் (பின்னால் மன்னிப்பு கோரப்பட்டது) மீறி இந்தியா வர நேரம் ஒதுக்கியது பாராட்டப்பட வேண்டியது. உடன் வந்த தொழிலதிபர்களிடம் இந்தியாவில் முதலீடு செய்யுமாறு வற்புறுத்தியது வரவேற்கப்பட வேண்டியது. ஆனால் பணம் பெயர வேண்டியது பிரிட்டிஷ் தொழிலதிபர்களிடமிருந்துதான் என்பதால் அதற்கேற்ற சூழ்நிலையை நாம்தான் உருவாக்க வேண்டும். காஷ்மீர் பிரச்னை தீர மூன்று அம்சத் திட்டம் என்று மூக்கை நுழைத்ததில்தான் நெடி ஏறியது. உள்நாட்டு விவகாரங்கள் குறித்து - தலையிடுமாறு வேண்டப்பட்டாலொழிய - மேலோட்டமாக நல்லெண்ணம் தெரிவித்து நிறுத்திக் கொள்வதுதான் நல்லது.

● எம். ரவிசந்திரன், சேலம்.

*? இந்தியா டுடேயில் பி.ஜே.பியின் ஆதரவு பெருகியுள்ளதாகக் கருத்து கணிப்பு வெளியிட, கல்கியில் அத்வானியின் செல்வாக்கு சரிந்து வருவதாகக் கார்ட்டூன் வெளியிடுவது முரணாகத் தெரிகிறதே?*

! 'இந்தியா டுடே' கணிப்பையெல்லாம் 'கல்கி' ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சட்டமா என்ன? மேலும், என்.டி.ஆர்., ஜெ., சம்பந்தப்பட்ட வரையிலான கார்ட்டூன் அது என்னும் போது, அந்த இரு மாநிலங்களை மட்டும்தான் குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டும்.

● ப. ரவிகுமார், திருத்துறைப்பூண்டி.

*? ருஷ்யத் தலைவரின் இந்திய விஜயம்...?*

! ரூபிள் மாற்றம் பற்றிய ஒரு குழப்பம் தீரவும், பாக்குக்கு எதிரான ருஷ்ய - இந்திய நட்புறவு பலப்படவும் உதவியது. முக்கியமாக நரசிம்மராவுக்கு மேஜர் - யெல்ட்சின் விஜயங்கள் டபுள் டானிக்காக அமைந்து தெம்பு அளித்திருக்கிறது.

☐ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. மணிகண்டன்,
57 A, மணிகண்டன் காம்பவுண்ட்,
ராமன்புதூர்,
நாகர் கோவில் - 629 002.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 22. கைகேயி வியந்தாள்

ஒரு பக்கம் இயற்கை வேகம் ராமனைப் பற்றிய அன்பு. மற்றொரு பக்கம் செய்த பிரதிக்ஞையை எவ்வாறு என் போன்றவன் பொய்யாக்கலாம் என்கிற தரும சங்கடச் சிக்கல். கைகேயி முடிவில் எப்படியோ இரக்கம் கொள்வாள், தரும சங்கடம் தீர்ந்து விடும் என்று தசரதன் எதிர்பார்த்தான். ஆனால் அது இல்லையென்று இப்போது முடிவாகத் தெரிந்து விட்டது.

இனி ஒரே ஒரு கடைசி ஆசை - ''நான் தந்து விட்ட வரப் பிரதிக்ஞையில் எவ்விதத்திலும் ராமன் கட்டுப்படவில்லை. என் பிரதிக்ஞையைப் பற்றி அவனுக்கென்ன தரும சங்கடம்? அவனுக்குப் பலம் இருக்கிறது. ஆதரவு இருக்கிறது. அவன் என் பேச்சைப் புறக்கணிக்கலாம். ஆனால் அவன் சுபாவத்துக்கு இது விரோதம். ஆயினும் ஒரு வேளை தெய்வாதீனமாக என்னை எதிர்க்கும் எண்ணம் அவனுக்குத் தோன்றலாம். அப்படிச் செய்வானானால் என் சத்தியமும் என்னால் குறைவின்றிக் காப்பாற்றப் பட்டதாகும்; குல நீதி, தருமம், ஜனங்களுடைய விருப்பம் இவையும் அவன் எதிர்ப்பின் மூலம் வெற்றியடையலாம். ராமன் என் பேச்சைக் கேளாமற் போனால் எல்லாம் சரியாகிப்போம்.''

இவ்வாறு தசரதன் எண்ணினான். பித்ரு வாக்கிய பரிபாலன தருமத்தை ராமன் கைவிடமாட்டான் என்கிற விஷயத்தைத் தசரதன் மறந்து விட்டு, இவ்வாறு குழப்பமும் துக்கமும் நிறைந்த தன் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டதாகத் தோன்றுகிறது.

தன்னுடைய மரணத்தை எப்படியும் நிச்சயமாக எதிர்பார்த்தான். இந்தத் தரும சங்கடத்தில் இது அவனுக்குக் கொஞ்சம் ஆறுதல் தந்தது. பின்னால் வரப் போகும் கஷ்டங்களைத் தன்னுடைய கண்களால் பார்க்க வேண்டியதில்லையல்லவா?

மரணம் அருகில் வந்து நிற்பதைக் கண்டு விட்டதும் பூர்வ நிகழ்ச்சிகள் ஞாபகத்துக்கு வந்தன. சிறு வயதில் தான் செய்த பாபம் நினைவுக்கு வந்தது. ''அதன் விளைவை இப்போது அனுபவிக்கிறேன். ரிஷி குமாரனைக் கொன்று அவனுடைய வயோதிகப் பெற்றோர்களுக்கு எத்தகைய பெரும் துக்கம் உண்டாக்கினேன்? அது வீண் போகுமா? நானும் புத்திரனைப் பிரியும் சோகத்தை அனுபவித்தால் அந்தப் பாபம் தீரும்'' - இவ்வாறு தன் உள்ளத்தைத் தசரதன் சமாதானப்படுத்திக் கொண்டான்.

எப்படியாயினும் கொடிய மனைவி தன்னிடம் பெற்று விட்ட வாக்கை நிறைவேற்றுவதைத் தவிர வேறு வழியில்லை என்று தீர்மானித்து விட்டான். ஆனபடியால் காரியக் கிரமத்தையெல்லாம் கைகேயிக்கு விட்டு விட்டான்.

பொழுது விடிந்தது. முகூர்த்த காலம் நெருங்கி விட்டதென்று வசிஷ்ட முனிவரும் சிஷ்யர்களும் பொன் பாத்திரங்களில் புண்ணிய நதிகளின் ஜலமும், இன்னும் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய சாமான்களும் எடுத்துக் கொண்டு அரண்மனை நோக்கி நகரத்து ராஜ வீதியில் சென்றார்கள். தெருவெல்லாம் மகோற்சவத்துக்காக அலங்கரிக்கப்பட்டு எங்கும் ஜனங்கள் நிறைந்து நின்றார்கள். எப்போது? எப்போது? என்று குதூகலமாகப் பேசிக் கொண்டிருந்த ஜனங்கள் வசிஷ்ட முனிவரும் அவருடைய சிஷ்யர்களும் செல்வதைப் பார்த்ததும் அடங்கா மகிழ்ச்சி அடைந்தார்கள். நீர்க் குடங்கள், தானியங்கள், ரத்தினங்கள், தேன், தயிர், நெய், பொரி, தர்ப்பைப் புல், சமித்து, புஷ்பம், பால், கனிகள், யானை, குதிரை, ரதம், வெண் குடை, சாமரம், காளை, புலித்தோலாசனம் இவையெல்லாம் வாத்திய கோஷத்துடன்

செல்லுவதைக் கண்டதும், ஜனங்களுடைய ஆரவாரமும் உற்சாகமும் முன்னை விட அதிகமாயின.

வசிஷ்டர் அரண்மனை வாயிலண்டை சுமந்திரனைக் கண்டார்.

''எல்லாரும் காத்திருக்கிறார்கள்; சகல ஏற்பாடுகளும் செய்து ஆயிற்று என்று அரசனுக்கு உடனே தெரிவிக்க வேண்டும்'' என்றார்.

சுமந்திரனும் கை கூப்பி வணங்கி, அரசன் படுத்திருந்த படுக்கை அறைக்கு வெளியிலிருந்து கொண்டு, வழக்கப்படி மங்கள ஸ்துதி செய்து விட்டு வசிஷ்டருடைய பிரார்த்தனையைத் தெரியப்படுத்தினான்.

''அரசனே, இந்திரனுக்குச் சமானமானவனே, இந்திரனுடைய சூதனான மாதலியைப் போல் நான் உம்மை எழுப்புகிறேன். எல்லா தேவர்களும் உமக்கு வெற்றி தருவார்களாக. பெரியோர்களும் படைத் தலைவர்களும் நகரத் தலைவர்களும் தரிசனத்துக்குக் காத்திருக்கிறார்கள். ராத்திரிதேவி மறைந்தாள். காலையில் செய்ய வேண்டியது சகலமும் உம்முடைய ஆணையை எதிர் பார்த்து நிற்கிறது. அரசர்க்கரசே, எழுந்து அருள வேண்டும்! வசிஷ்ட பகவான் பிராமணர்களுடன் காத்திருக்கிறார்'' என்றான்.

அச்சமயம் அரசனோ பேச முடியாமல் சங்கடத்தின் உச்சியை அடைந்திருந்தான். ஆனபடியால் அரசனுக்குப் பதிலாகக் கைகேயி தைரியமாகச் சுமந்திரனிடம் சொன்னாள் :

''சுமந்திரரே! மகாராஜா ராத்திரி முழுதும் ராம பட்டாபிஷேகத்தைப் பற்றியே பேசிக் கொண்டு தூங்காமல் கழித்தார். இப்போதுதான் அயர்ந்து கொஞ்சம் தூங்குகிறார். சீக்கிரம் சென்று ராமனை அழைத்து வாரும்'' என்று சமத்காரமாகப் பேசிச் சுமந்திரனை ராமனிடம் அனுப்பினாள்.

தசரதன் தன் யோசனைக்கு ஒப்புக் கொண்டு விட்டான்; ஆயினும் அதைச் செய்து முடிக்கும் ஆற்றல் அவனுக்கு இல்லை; ஆனபடியால் இனிச் செய்ய வேண்டியதையெல்லாம் தானே செய்ய வேண்டும் என்று கைகேயி தனக்குள் தீர்மானித்து விட்டாள்.



சுமந்திரன் ராமனுடைய அரண்மனைக்குச் சென்றான். சீதையும் ராமனும் மகோற்சவத்துக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயம் சுமந்திரன் ''மன்னனும் கைகேயி அரசியும் உம்மை உடனே வரச் சொன்னார்கள்'' என்று சங்கதியைத் தெரிவித்தான்.

ராமன் உடனே புறப்பட்டான். இந்தத் தாமதமும் நடவடிக்கைகளும் கண்டு எல்லாருக்குமே கொஞ்சம் சந்தேகம் உண்டாயிற்று. ஆனாலும் அவர்களுக்கு விஷயம் விளங்கவில்லை. அதைப் பற்றிப் பேசவும் மனமில்லை. எல்லாம் நல்லதாகத்தான் முடியும் என்று அவரவர்கள் செய்ய வேண்டியதைச் செய்து கொண்டு போனார்கள்.

தெருக்களெல்லாம் உற்சவ அமர்க்களம். முகூர்த்தமோ அடுத்து வந்து விட்டது. இதனிடையில் அரண்மனை அந்தப்புரத்தில் ஜனங்கள் கொஞ்சமும் எதிர்பாராத காரியம் நடந்து கொண்டிருந்தது.

ஏன் வீணாகத் தாமதம் செய்கிறார்கள்? ஒரு வேளை ஏதோ செய்ய வேண்டிய கிரியைகளும் முறைகளும் நீடித்துக் கொண்டு போகிறது போலிருக்கிறது என்று ஜனங்கள் சமாதானப் படுத்திக் கொண்டு காத்திருந்தார்கள்.

வீதிகளில் ஜனக் கூட்டம் வர வர அதிகரித்து வந்தது.

சுமந்திரன் ராமனை அழைத்து வந்தான். கூட்டமாக நின்ற ஜனங்களை மெதுவாக ஒதுக்கி வழி செய்து கொண்டு அவர்கள் சென்றார்கள். அந்தப்புரத்தில் தந்தையின் படுக்கையறையில் ராமன் நுழைந்தான். நுழைந்ததும் பாம்பின் மேல் கால் வைத்தாற் போல் பயந்து திடுக்கிட்டான். அங்கே தந்தையின் நிலையைப் பார்த்து ராமனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

அரசன் ஏதோ பெருந் துக்கத்தில் மூழ்கிக் கிடந்தான். அவனுடைய முகம் மல்லிகைப் புஷ்பம் வெய்யிலில் உலர்ந்து போனால் எப்படியிருக்குமோ, அப்படியிருந்தது.

தந்தையின் பாதங்களைத் தொட்டு வணங்கினான். பிறகு கைகேயியின் பாதங்களையும் தொட்டு அவளையும் வணங்கினான்.

''ராம'' என்று ஒரு வார்த்தை தீன கரத்தில் தசரதன் சொல்லி விட்டு கம்மா இருந்து விட்டான். பேசவில்லை. ராமனுடைய முகத்தை நேராகப் பார்க்க அரசனால் முடியவில்லை.

தன்னுடன் பேசாமலும் பாராமலும் படுத்துக் கிடந்த தந்தையின் நிலையைப் பார்த்து ராமன் வியப்பும் பயமும் அடைந்தான்.

தாங்க முடியாத வேதனையிலிருந்த அரசனைப் பார்த்து ஒன்றும் விளங்காமல் திகைத்து ராமன், ''அம்மா! இதென்ன ஆச்சரியமாக இருக்கிறது. எவ்வளவு கோபமாயிருந்தாலும் என்னிடம் எப்போதும் இனிய பேச்சுப் பேசுவாரே தந்தை? ஏதாவது நானும் அறியாமல் தவறு செய்து விட்டேனா? ஏதாவது உடம்பில் திடீர் என்று அசௌக்கியம் ஏற்பட்டு விட்டதா? யாராவது ஏதாவது அவருக்குக் கோபம் மூட்டும்படியான சொல் பேசிவிட்டார்களா? தயவு செய்து நடந்ததை எனக்குச் சொல்ல வேண்டும். இதை என்னால் பொறுக்க முடியவில்லை'' என்றான்.

இப்படி ராமன் துக்கத்திலும் வியப்பிலும் மூழ்கிக் கேட்ட கேள்விக்குக் கைகேயி கூச்சம் கொஞ்சமுமின்றித் தன் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளும் சமயம் வந்து விட்டது என்று பேசினாள்.

''அரசருக்கு யார் பேரிலும் கோபமில்லை, ராமனே! உடம்பில் ஏதும் குறைவில்லை. ஏதோ அவர் மனத்திலுள்ள விஷயத்தை உன்னிடம் சொல்லப் பயப்படுகிறார். அவ்வளவுதான். நீ மனம் நொந்து கொள்வாய் என்று உன்னிடம் விஷயத்தைச் சொல்லப் பயப்படுகிறார். அதனால் பேச முடியாமலிருக்கிறார். முன்னொரு சமயம் என்னிடம் சந்தோஷப் பட்டு எனக்கு வரம் தந்தார். இப்போது 'ஏன் தந்தேன்' என்று பாமரர்களைப் போல் அரசர் வருத்தப்படுகிறார். இது அவருக்குத் தகாததல்லவா? கொடுத்தேன் என்று ராஜாவான ஒருவர் பிரதிக்ஞை செய்து விட்டுப் பிந்தி வருத்தப்படுவது மடமையல்லவா? அவர் கொடுத்த வரத்தைச் செய்து தீர்க்க வேண்டியது உன் கையில் இருக்கிறது. உனக்குச் சொல்லப் பயந்து கொண்டு கொடுத்த வரத்தையும் செய்த பிரதிக்ஞையையும் பொய்யாக்கலாம் என்று யோசிக்கிறார். இது அவருக்குத் தகுமா? 'பயப்பட வேண்டாம். எனக்காக நீர் சத்தியத்தைக் கைவிட வேண்டாம்' என்று நீ அவருக்



"குடியரசு நாளன்று கைதிகளை பாட்டுப் பாடச் சொன்னது தப்பாப் போச்சு."

"ஏன், என்னாச்சு..?"

"சின்னச் சின்ன ஆசை சிறை உடைக்க ஆசை"யின்னு ஒருவன் பாடிட்டான்..!

- கு. பன்னீர் செல்வம்

குத் தைரியமும் உறுதியும் சொல்லி விட்டால் அவர் பேசுவார். அவருக்கு நீ உதவி செய்ய வேண்டும். எல்லாம் உன் கையிலிருக்கிறது. 'செய்து தீர்க்கிறேன். அதற்குத் தடையில்லை' என்று நீ எனக்கு உறுதி கூறினால் விஷயத்தைப் பிற்பாடு சொல்லுகிறேன்'' என்றாள்.

இதைக் கேட்டு ராமன் வருத்தம் மேலிட்டு, அரசன் பக்கத்தில் நின்ற கைகேயிக்குச் சொன்னான் :

''அம்மா! என்னைப் பற்றியா இந்த கஷ்டம்? என்னைப் பற்றி நீங்கள் இம் மாதிரி சந்தேகப்படலாகாது. நான் அவ் வளவு கெட்டுப் போனவனல்ல. என் னைத் தந்தை நெருப்பில் விழச் சொன்னால் விழுவேன். விஷத்தைச் சாப்பிடு என்றால் உடனே சந்தோஷ மாகச் சாப்பிடுவேன். இது உங்களுக்குத் தெரியாதா? கடலில் விழச் சொன்னா லும் விழுவேன் என்று நீங்கள் அறிவீர் கள். இதோ தாயே, சபதம் செய்கிறேன். ஒன்றும் விசாரிக்க வேண்டியதில்லை. அரசர் இதைச் செய்ய வேண்டும் என்று என்னால் ஆகக்கூடியதை ஆணையிட லாம். அவர் ஆணை எதுவாயினும் அதைச் செய்வேன், சத்தியம் என்றான்.

இப்படி ராமன் சொன்னதைக் கேட்டதும் 'முடிந்தது காரியம்' என்று மகிழ்ச்சி அடைந்தாள் கைகேயி. அர சனும் 'இனி தப்புவதற்கு வழியில்லை' என்று துக்கத்தில் மூழ்கினான்.

அதன் மேல், நாணம், இரக்கம் கொஞ்சமுமின்றி மகா பயங்கரமான விஷயத்தைப் பாவி கைகேயி சொன் னாள் :

''ராமா, நீ சொன்ன மொழி உனக்கே தகும். தந்தையைச் சத்தியவா னாகச் செய்வதை விட ஒரு மகனுக்கு வேறு என்ன மேலான காரியம்? விஷ யத்தை இப்போது சொல்லுகிறேன், கேள். ஏன் உனக்குச் சொல்ல அரசர் பயந்தார் என்பது உனக்கு விளங்கும். சம்பரனுடன் உன் தந்தை சண்டையிட் டுக் காயம்பட்ட காலத்தில் அவ ருடைய உயிரைக் காப்பாற்றிய எனக்கு அவர் நான் இஷ்டப்பட்ட இரண்டு வரங்களைத் தருவேன் என்றார். 'இப் போது வேண்டாம், வேண்டும்போது கேட்பேன்' என்றேன். 'அப்படியே ஆகட்டும்' என்று அவரும் ஒப்புக் கொண்டார். இப்போது அந்த வரங் களைக் கேட்டுப் பெற்றேன். பரதனுக் குப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டும் என்றும், இன்றே நீ ராஜ்யத்தை விட்டு விலகி தண்டகாரணியம் போக வேண் டும் என்றும் இந்த இரண்டு வரங்களை யும் அரசனிடம் அடைந்திருக்கிறேன். உன்னுடைய பிரதிக்ஞையையும் தந்தை யின் சத்தியத்தையும் காப்பாற்றுவா யாக. நீயும் பொய்யனாகப் போனால் அது வேறு சங்கதி. இல்லையேல், நான் சொல்லுவதைக் கேள்; தாமதமில் லாமல் உனக்கு அபிஷேகம் செய்ய வைத்திருக்கும் ஜலத்தைக் கொண்டே பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடத்தி விடச் சொல். ஜடையும் மரவுரியும் தரித்து நீ தண்டகவனம் உடனே செல். சம்மதித்தேன் என்று சொல்லி அரச னுடைய பெருங் கஷ்டத்தைத் தீர்ப்பா யாக. இது உனக்குப் புகழ் தரும்'' என்றாள்.

'புகழ் தரும்' என்று கைகேயி வாய் வழி வந்த வார்த்தை உண்மையே அல் லவா? இமயமலையும் கங்கையாறும் சமுத்திரமும் இருக்கும் வரையில் ராமனுடைய புகழ் இருந்தே வரும்!

இதையெல்லாம் கேட்டுக் கொண் டிருந்த தசரதனுடைய உள்ளம் கொதித் தது. ஆனால் கைகேயியின் வியப்பே வியப்பு! ராமனுடைய முகத்தில் வருத் தம் என்பது அடையாளத்துக்குக் கூடக் காணப்படவில்லை. சக்கரவர்த்தித் திரு மகன் புன்னகை செய்து பேசினான் :

''அப்படியா, தாயே? அரசனுடைய பிரதிக்ஞை நிறைவேறும்படி சடையும் மரவுரியும் தரித்து இன்றைக்கே வனம் செல்லுகிறேன்'' என்றான்.

ராமன் கைகேயியைப் பார்த்துக் கம்பீரமாகப் பேசலானான் :

''தாயே, எனக்கு எள்ளளவும் வருத்தம் இல்லை. பரதனுக்கு நான் எதையும் கொடுத்துவிட்டுப் பரம சந்தோஷத்தை அடைவேன். நீங்கள் யாரும் என்னைக் கேட்காமலே நான் அவனுக்குத் தருவேன். அப்படியிருக்கத் தந்தையின் ஆணை ஏற்பட்டதும் ஒரு கணம் தயங்குவேனா? அரசர் சந்தேகப்பட்டதுதான் எனக்கு வருத்தம் தருகிறது. அவர் இஷ்டத்தை எனக்கு நேரில் சொல்ல அவருக்கு ஏன் கூச்சம்? அவருக்கு நான் அடிமையல்லவா? அவருடைய வாக்கைச் சத்திய வாக்காகச் செய்வதை விட எனக்கு வேறு என்ன புகழ், என்ன பாக்கியம்? இதற்காகவா தந்தை எப்போதும் போல் பிரியமாகப் பேசாமல், முகத்தை எனக்குக் காட்டாமல் கஷ்டப்பட்டது? அவரே நேரில் என்னை அழைத்து இந்த ஆணையைச் சொல்லாததுதான் என்னுடைய குறை. இன்றே ஒரு விசாரமுமில்லாமல் வனம் செல்லுகிறேன். உடனே தூதர்களை வேகமாகப் போகச் சொல்லி பரதனை அழைத்து வர ஏற்பாடு செய்யுங்கள், தாமதிக்க வேண்டாம்'' என்றான்.

சக்கரவர்த்தித் திருமகன் முகத்தில் அந்தக் கணத்தில் தேஜஸ் நெய் விட்ட அக்கினி போல் வளர்ந்தது. பாவி கைகேயியோ தான் வெற்றி யடைந்து விட்டதாக எண்ணிச் சந்தோஷப் பட்டாள். வரப் போகும் துக்கத்தை அவள் அறியவில்லை. பெற்ற மகனுடைய இகழ்ச்சியை விட வேறு என்ன வேண்டும் ஒரு ஸ்திரீக்குத் துக்கம்? ஆசை என்பது அவளை ஏமாற்றி விட்டது. சொந்த மகனான பரதனுடைய குணத்தைக் கூட அவள் சரியாக உணர முடியாமல் செய்து விட்டது.

நாலாபக்கமும் வழியடைத்து அகப்பட்டுக் கொண்ட காட்டு யானை போல் தசரதன் தவித்துக் கொண்டிருக்க, கைகேயி அனாவசியமாக ''அரசன் பேசுவதற்காகத் தாமதிக்க வேண்டாம்'' என்று ராமனைத் துரிதப் படுத்தினாள்.

''தாயே! என்னை நீ அறிந்து கொள்ளவில்லை'' என்றான் இராமன். ''தந்தையின் சொல்லை நிறைவேற்றுவதை விட நான் எந்த சுகத்தையும் அதிகமாக மதிக்கவில்லை. பொருளுக்கு ஆசைப்படுவேன் என்று எண்ண வேண்டாம். பரதன் ராஜ்ய பாரத்தை வகித்து மூப்படைந்த தந்தையைச் சரியாகப் பார்த்து வர வேண்டும். அதுவே என்னுடைய மகிழ்ச்சியுமாகும்.''

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த தசரதன் 'ஓ!' என்று பெருங் குரலிட்டு அழுதான். அரசனையும் கைகேயியையும் பாதங்களைத் தொட்டு வணங்கி விட்டு ராமன் துரிதமாக அவ்விடத்தை விட்டு வெளியே சென்றான்.

வெளியே இருந்த லக்ஷ்மணன் கண்கள் சிவந்து மகா கோபத்துடன் ராமன் பின் சென்றான்.

வழியில் அபிஷேக ஜலக் குடங்களைக் கண்டு முகத்தில் கொஞ்சமும் வருத்தக்குறி இல்லாமல் கம்பீரமாக அவற்றை வலம் செய்து ராமன் சென்றான். தன்னுடன் வந்த வெண்குடை சாமரம் முதலியவைகளை விலக்கி விட்டு, அங்கிருந்த நகரத்து ஜனங்களையும் கலைந்து போகச் சொல்லி விட்டு, ஜிதேந்திரியனான சக்கரவர்த்தித் திருமகன் கௌசல்யா தேவியின் மனைக்குச் சென்றான். தாயிடம் விஷயத்தைச் சொல்லி உடனே வனம் செல்வதற்கு விடை பெற்றுக் கொள்ளச் சென்றான்.

இந்தக் கட்டத்தில் நிகழ்ந்த உணர்ச்சி வேகங்களை வெறுமனே எழுதியதைத் படித்தால் மட்டும் உணர்வது கஷ்டம். அவரவர் பெற்றிருக்கும் கற்பனைச் செல்வத்தை உபயோகித்து அகக் கண்ணால் நிகழ்ச்சிகளைக் காண வேண்டும். தசரதன் உள்ளமும், சக்கரவர்த்தித் திருமகன் உள்ளமும், ஆசைக்கு இரையான பரதனுடைய தாயின் உள்ளமும் வாழ்க்கையில் தினமும் அடிபடும் நம்முடைய உள்ளங்கள்.

வால்மீகி அகக் கண்ணால் முற்றிலும் ராம சரித்திர நிகழ்ச்சிகளைக் கண்டு பாடினார். கம்பரும் அப்படியே பாடினார். ஆழ்வார்களும் கண்டு உள்ளம் உருகிப் பாடியிருக்கிறார்கள். எந்த இடத்திலும் எங்கேயாயினும் ராமாயணக் கதையை யாரேனும் சொன்னால் அவ்விடம் ''பாஷ்பவாரி பரிபூர்ண லோசன''த்துடன் கண்களிருந்து நீர் பெருக ஆஞ்சனேயர் கை கூப்பி நின்று கேட்டுக் கொண்டிருப்பார் என்று பெரியோர்கள் சொல்லுவதின் கருத்து இதுவே.

இந்தக் கட்டத்தைப் பக்தியுடன் படிக்கும் ஆண், பெண், குழந்தைகளுக்கு எப்போது எந்தத் துக்கம் வந்தாலும், ஸ்ரீராமன் அருளால் அந்தத் துக்கத்தைத் தாங்கும் சக்தி உண்டாகுக.

(தொடரும்)

ॐ



# ஸ்ரீ காஞ்சி மடம் அறிவிப்பு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் 100 வது ஆண்டு விழா வருகிற 93 சங்கர ஜெயந்தி முதல்- 94 சங்கர ஜெயந்தி வரை, 1 ஆண்டு காலம் பாரத தேசமெங்கும் கிராம நகரங்களில் எல்லாம் கொண்டாட வேண்டும். கோயில்களில் அபி ஷேகங்கள், அர்ச்சனை, உபன்யாசங்கள், நம் நாட்டுக்கலை நிகழ்ச்சிகள், ஹோமம், வேதபா ராயணம், வேத விற்பன்னர்களை கௌரவித்தல், ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகளின் படத்தை வைத்து ஊர்வலம், பள்ளி, கல்லூரி மாணவர்களிடையே மத, நீதி சம்பந்தமான போட்டிகள், பரிசு வழங்குதல் ஆகியவை நடத்தப்படவேண்டும். காஞ்சீபுரத்திலும், சுவாமிகளின் அவதார ஸ்தலமான விழுப்புரத்திலும் இத்தனையும் விசேஷமாகச் செய்யப்படும்: முக்கியமாக காஞ்சீபுரத்தில், வேத ஸதஸ், சாஸ்திர ஸ்தஸ், ஆகம ஸதஸ், இந்திய கலை நிகழ்ச்சிகள், விசேஷமாக 101 பண்டிதர்களுக்கு சன்மானம் அளித்தல், அன்ன தானம், கோதானம் மற்றும் அதிருத்ரமும், ஸகஸ்ர சண்டி ஹோமமும், அவதார தினத்தன்று கனகாபிஷேகமும் நடைபெறும். ஆஸ்திக அன்பர்களும், பக்தகோடிகளும் இந்த வைபவத்தில் கலந்து கொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இந்நற்பணிக்காக அன்பர்கள் தாராளமாக உதவியளிக்க வேண்டும் என்பது ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் விருப்பம். அன்பர்கள் பணமாகவோ, பொருளாகவோ, D.D. ஆகவோ கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்புமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் அரிய புகைப்படங்கள் அல்லது உபன்யாச ஒலி நாடாக்கள் (டேப்) வைத்திருக்கும் அன்பர்கள் எமக்கு தெரிவித்து உதவினால் அதனை பிரதிகள் எடுத்த பின்பு அவர்களுக்கு பத்திர மாகத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.

**ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகள்**

**100வது ஆண்டு விழா சமிதி**

**விழாத் தலைவர் :**

திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள்
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்,
காஞ்சீபுரம், தமிழ்நாடு.



# சீசனுக்கேற்ற ஒப்பீடு!

◆ 'அமைச்சரவை புதுசு; அசமந்தம் பழசு!' - தலையங்கம் இன்றைய அரசியல் எதிர்பார்ப்பு, தேக்க நிலையை அப்பட்டமாக எடுத்துக் காட்டியது. அதிலும் ''கிரிக்கெட், ஃபுட்பால் ஆட்டங்களில் நாடு அடுத்தடுத்துத் தோல்விகளையே கண்டாலும் பாதகமில்லை; குடிமுழுகிப் போய் விடாது. ஆனால் நாட்டையே விளையாட்டு மைதானமாக்கித் தலைவர்கள் பாழ்படுத்தி விட வேண்டாம்'' என்ற வரிகள் அட்சர லட்சம் பெறும்!

மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

◆ சீசனுக்கேற்றாற்போல் (மத்திய) அமைச்சரவையை கிரிக்கெட் அணியுடன் ஒப்பிட்டுத் தலையங்கம் எழுதியுள்ள நேர்த்தி அருமை! ஐந்து நாள் டெஸ்ட் போல் வசவச என்று இழுத்து இம்சிக்காமல் ஒரு நாள் ஆட்டம் போல் அமைச்சரவை விறு விறுப்பாகச் செயல்பட்டு 'ரிசல்ட்' காட்டினால் தேவலை!

ஈரோடு - 4, சி. நாச்சிமுத்து.

◆ சாயிபாபாவின் ஷீரடி பற்றிக் கேள்விப் பட்டிருந்தாலும், உங்கள் கட்டுரை அந்த நடமாடிய அவதார தெய்வத்தின் புனிதத் தலத்தை நேரில் காணும் ஆவலைத் தூண்டி விட்டது.

கொச்சின் - 5, ஆர். இளங்கோ.

◆ ''சீரான வாழ்வுக்கு அருளும் ஷீரடி'' என்ற கட்டுரை படித்தேன். பாபாவின் சரித்திரம் சொல்லும் புத்தகம் எல்லா மொழிகளிலும் கிடைக்கிறது, தமிழ் தவிர என்பது தவறு. சில காலம் முன்பு ஷீரடி சென்றிருந்த நான் 'பாபாவின் சரித்திரம்' என்ற தமிழ்ப் பதிப்பு நூலை வாங்கி வந்திருக்கிறேன்.

தி. கூட்டுரோடு, எல். சோமேஸ்.

◆ 'அண்ணா வழி' நடப்பவர்கள் என்று தம்பட்டம் அடித்துக் கொள்பவர்கள் கூட யோசித்துச் செயல்படாத இந் நேரத்தில், அறிஞர் அண்ணாவின் நினைவு தினத்துக்குக் 'கல்கி' சரியான முறையில் கவர் ஸ்டோரி அமைத்து அஞ்சலி செய்து விட்டது. பாராட்டுக்கள்.

மேல்பட்டி, எல். மாறன்.

◆ அண்ணாவின் பெயரால் அரசியல் ஆதாயம் அடைய முயலும் அநேகருக்கு, ''அண்ணாவை மறந்து விட்டார்களா'' எனும் அலசல், சரியான சவுக்கடி.

கும்பகோணம், கே. சித்ரா.

◆ மானா பாஸ்கரின் ''செங்காய்'' தரம் மிக்க சிறுகதை. நெஞ்சில் என்றென்றும் நிலைத்திருக்கும் அழகிய உயிரோவியம். அண்ணாவின் அட்டைப்படம் அட்டகாசம்!

தக்கோலம், அ. முஸ்தபா கமால்.

◆ 'காந்தி தேசம்', 'ரௌத்ரம் பழகு' என்ற இரு சிறுகதைகளும் நாட்டில் நல்லவை நலிய, அல்லவை ஓங்குவதை அப்பட்டமாக வெளிக்கொணர்ந்துள்ளன. ''செங்காய்'' காயல்ல; பழம்!

சிதம்பரம், என். எம். கிருஷ்ணா.

◆ ''கதாவா இப்படி?'' சிறுகதையில் ஒரு பொறுப்புள்ள தகப்பனின் மகளைப் பற்றிய எதிர்காலக் கவலையையும், கண்ணால் காண்பதும் பொய், காதால் கேட்பதும் பொய், தீர விசாரிப்பதே மெய் என்ற உண்மையையும் ஒருசேரப் பின்னி அட்டகாசமாக்கி இருந்தார் கிருஷ்ணா.

அரூர், மு. மதிவாணன்.

◆ 'எப்படி வேணும்னாலும் அடிச்சுக்குங்க(!) ஆனால் என் சீட்டுக்கு ஆபத்து வராமல் (கூட்டணி முறிவு) பார்த்துக் கொள்ளுங்கள்!' என்று சொல்லும் நரசிம்மராவ் கார்ட்டூன் நல்ல ஜோக்சார்!

முத்துப்பேட்டை, மிஸ்டர் தஞ்சை.




◆ 'அது ஃபாஸ்ட்; இது சூப்பர் ஃபாஸ்ட்' என்று ஒரு கேள்விக்குப் பதிலளித்து, இரண்டு கட்சிகளின் வண்டவாளங்களையும் தண்ட வாளத்தில் ஏற்றிய படுதைரியம், கல்கிக்கு மட்டுமே கைவந்த கலை.

கும்பகோணம், புலவர் எஸ். கே. மூர்த்தி.

◆ 'காந்தி தேசம்' வெகு அருமை. 'லஞ்ச தேசம்' என்று தலைப்பு வைத்திருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும். இதுவொரு சூப்பர் கதை.

ஆவடி, என். ஆர். மகேஸ்வரி.

# வால்டர் வெற்றிவேல்

**வே**கம், வேகம், வேகம்...

இதற்கு அடித்தளமாக அமைந்திருப்பது இயக்குனரின் திரைக் கதை.

தொடக்கத்திலேயே இடம்பெறும் பொன்னம்பலம் - சத்யராஜ் மோதல்... முடிவுப் பகுதியில் ராக்கி, நாசர் அண்ட் கூட்டத்தினரோடு சத்யராஜுக்கு நிகழும் மோதல்... இந்த இரண்டு சம்பவங்களுக்கும் சூடுசேர்ப்பது காமெராக்காரரின் கைவண்ணம்.

தாற்காலிகமாகப் பார்வையை இழந்து, விஷம் கலந்த பால் எனத் தெரியாமலே அதைத் தன் குழந்தைக்குப் புகட்டி, தாலாட்டுப் பாடி அதைத் (நிரந்தரமாகத்) தூங்க வைக்கும் கட்டத்தில் சுகன்யா வர வழைப்பது மனநெகிழ்வை.

கல்லூரி வளாகத்தில், சில கோரிக்கைகளைக் கல்லூரி முதல்வர் நிறைவேற்ற வேண்டும் என வற்புறுத்தி 'ஆடை உரிப்பு'ப் போராட் டத்தில் ஈடுபடும் ரஞ்சிதாவின் அறிமுகம், பின்னர் வீட்டில் அவர் அமைச்சரின் மகள் - சத்யராஜின் தங்கை என வெளிப்படுவதில் ஏற்படுத்துவது மெலிதான ஆச்சரியம்.

நெஞ்சு நிறைய வக்ரமும் பார்ப்பதற்குப் பால்வடியும் வெகுளித் தனமும் நிறைந்த மற்றொரு சகோதரன் ராஜ்சந்தர் நிகழ்ச்சிகளின் திருப்பத்துக்கு அவ்வப்போது பயன்படும் நெம்புமுனை. அண் ணிக்குப் பார்வை வந்து விட்டால் தவறான தொழிலில் ஈடுபட்டுள்ள தன்னை அடையாளம் கண்டுகொண்டு விடுவாள் என்பதற்காக, அதனைத் தடுக்கும் முயற்சியில் அவர் படும் அவஸ்தைகள் கதைக்குச் சேர்ப்பது விறுவிறுப்பு.

அறிஞர் அண்ணாவை நினைவுக்குக் கொண்டுவரும் அடக்கமான அமைச்சராக விஜயகுமார் அரங்கில் வரவழைப்பது புன்னகையை என் றால் அலட்டலாகப் பேசி, அமைச்சரின் முதுகுக்குப் பின்னால் அவ ருக்குத் தெரியாமல் வஞ்சம் வாங்க அவ் வப்போது முயன்று தோற்கும் அமைச்சரின் பி.ஏ. கவுண்டமணி ஏற் படுத்துவது அட்டகாச மான சிரிப்பை.

அவருக்கு என்றே மிகக் கவனமாகப் படைக்கப்பட்ட பாத்திரத்தில் மிகவும் திளைத்து சத்யராஜ் கிளப்புவது தூள்.

அங்கங்கே தென்படும் குறைபாடுகளை அதிக நேரம் மனத்தில் தங்கி விடாமல் அடித்துக் கொண்டு போவது சம்பவங்களின் சுறு சுறுப்பு.

திட்டமிட்ட நிகழ்ச்சிகள் - தெவிட்டாத சுவை.

- சி.ஆர்.கே.



# கலையுலகில் பாராட்டு; குடும்பத்தில் முணுமுணுப்பு!

''எவரண்டி அம்மாயி? சாலபாக சேசிந்தி...'' (யார் இந்தப் பெண்? ரொம்ப நன்றாக நடிக்கிறாளே...!) என்று இருளில் ஒலித்த குரலுக்குரியவர் : திருமதி பானுமதி! ரஷஸ் முடிந்து விளக்குகள் மீண்டும் எரிந்த போதுதான் அது தெரிந்தது. நான் சிறுமியாக இருந்த போது, அவர் நடித்த முதல் படமான 'வர விக்ரயம்' பார்த்து அவருடைய ரசிகையாக மாறியிருந்தேன். அவர் அழகையும் பாட்டுத் திறனையும் பின்னர் பல படங்களில் ரசித்திருக்கிறேன். அவர் வாயால் முதல் பாராட்டுப் பெற்றது என்னுடைய பேரதிர்ஷ்டம். நாகி ரெட்டியார் என்னை பானுமதியிடம் அறிமுகப்படுத்திய போது எனக்குத் தலை கால் புரியவில்லை. அந்த இனிய ஆச்சரியத்திலிருந்து நான் மீண்டு வருவதற்குள் நாகிரெட்டி முதலானோர் எனக்கு விடைகொடுத்து வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள்.

ரஷஸ் காட்சி முடிந்து இரண்டு மூன்று தினங்கள் வரை வாஹினி அலுவலகத்திலிருந்து எந்தத் தகவலும் இல்லை. ஜெமினியிலிருந்தும் செய்தி இல்லை. பானுமதி அம்மாவின் பாராட்டைப் பெற்றிருந்தாலும் 'குறிப்பிட்ட கதாபாத்திரத்துக்கு நான் பொருந்த மாட்டேன்' என வாஹினியில் தீர்மானித்திருப்பார்கள் போலும் என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன்.

நான்காம் நாள், எல்.வி. பிரசாத்தும் நாகிரெட்டியும் என் வீட்டுக்கு வந்தார்கள். ''எங்கள் படத்தில் உனக்கு வாய்ப்புத் தரத் தீர்மானித்து விட்டோம். ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட எங்கள் அலுவலகத்துக்கு வருகிறாயா?'' என்றார்கள். அவர்கள் வந்த காரிலேயே என்னை அழைத்துச் சென்றார்கள்.

வாஹினி அலுவலகத்தில் என்னிடம் ஒப்பந்தப் பத்திரத்தை நீட்டிய போது, வரும் வழிநெடுக என் மனத்தில் குடைந்தெடுத்த கேள்வியைக் கேட்டேன் :

''எனக்கு என்ன மாதிரியான கதாபாத்திரம் தரப் போகிறீர்கள்?''

தயங்கித் தயங்கி நான் வெளிப்படுத்திய இக் கேள்வியைத் தொடர்ந்து ஒரு கனத்த மௌனம் நிலவியது. உடனே பயந்து போன நான் ''ஏதாவது தவறாகக் கேட்டிருந்தால் மன்னித்து விடுங்கள்...'' என வேண்டிக் கொண்டேன். பயத்தில் அழுகையே வந்து விடும் போலிருந்தது.

இதை உணர்ந்து கொண்ட எல்.வி. பிரசாத், இலேசாகச் சிரித்து விட்டுச் சொன்னார் :

''நீதான்மா எங்க படத்துக்கு ஹீரோயின்!''

எனக்கு மயக்கமே வந்து விடும் போலிருந்தது. சுதாரித்துக் கொண்டு நன்றி தெரிவிப்பதற்குள் பிரசாத் மளமளவென அடுக்கினார் :

''இந்தப் படத்தில் நடிக்க உனக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுப்போம். மாசம் ஐந்நூறு ரூபாயாகப் பணத்தை வாங்கிக் கொள்ளலாம். படம் முடியும் போது எஞ்சியிருக்கக்கூடிய தொகையை 'செடில்' செய்து விடுவோம்...''

இதைக் கேட்டதும் சந்தோஷத்தில் உடல் நடுங்கியது. அந்தத் தொகை எங்கள் குடும்பத்துக்கு எவ்வளவு உதவியாக இருக்கும் என்பது எனக்குத்தானே தெரியும்!

இது நடந்தது 1949, நவம்பர் ஐந்தாம் தேதி. நாங்கள் அப்போது கூட்டுக் குடும்பமாக வாழ்ந்து வந்தோம். என் தந்தை அரசாங்க அலுவலராக அஸ்லாமில் பணியாற்றி வந்தார். ஆனால் அம்மாவும் சகோ

சௌகார் ஜானகி

தர, சகோதரிகளும் எங்களுடன் சென்னையில் வசித்தார்கள். பால்மணம் மாறாத கைக் குழந்தை வேறு. இவர்களைப் பராமரிக்கும் பொறுப்புடன், என் கல்யாணத்துக்காக எனது தந்தை வாங்கியிருந்த கடனை அடைக்கும் தார்மீகப் பொறுப்பும் எனக்கு இருப்பதாக உணர்ந்தேன்.

எனக்கு நடிக்கும் வாய்ப்புக் கிடைத்து விட்டதைக் குடும்பத்தாரிடம் தெரிவித்த போது அவர்கள் யாருமே ஆட்சேபிக்க வில்லை. மாறாக, ஷூட்டிங் தினத்தை என்னை விட ஆவலாக எதிர்பார்க்க ஆரம்பித்தார்கள். என்னுடன் ஸ்டூடியோவுக்கு வர ஆயத்தம் செய்ய ஆரம்பித்தார்கள்.

ஆனால் நான் மறுத்து விட்டேன்; ஷூட்டிங்குக்கு யாரும் என்னுடன் வரக் கூடாது என்று தீர்மானமாகச் சொல்லி விட்டேன். அதற்கான காரணத்தையும் நான் அவர்களிடம் சொல்லத் தயங்கவில்லை :

நடிப்புத் தொழிலுக்குப் போய் விட்டால் நம்மை மறந்து காட்சியுடன் ஒன்றிவிட வேண்டியதுதான். இதனால் சோகக் காட்சியானாலும் சரி, சிரிப்புக் காட்சியானாலும்சரி, காதல் காட்சியானாலும் சரி - அதில் நடிப்பது ஒரு நடிகை என்ற நினைவுதான் மேலோங்க வேண்டுமே தவிர, 'நம்ம வீட்டு ஜானகி நடிக்கிறாள்' என்ற எண்ணம் பார்ப்பவருக்கு வரக் கூடாது. ஆனால் இந்தப் பக்குவம் நெருங்கிய குடும்பத்தாருக்கு எளிதில் வந்து விடாது என்பதை நான் உணர்ந்திருந்தேன். மேலும், அவர்கள் பார்க்கிறார்கள் என்பதால் எங்கே நான் சகஜமாக நடிக்க முடியாமல் போய் விடுமோ என்று பயம்! இதன் காரணமாகவே அவர்கள் என்னுடன் ஷூட்டிங்குக்கு வருவதற்குத் தடை விதித்தேன்.

ஆனால் நான் நடிப்பதைப் பார்க்கும் போது ஏற்படக்கூடிய பாதிப்புகளை விட அதிகமான பாதிப்புகளை என்னுடைய 'தடையுத்தரவே' விளைவித்து விட்டது.

என் தாயாரும் சகோதர சகோதரிகளும் இலேசாக முணுமுணுக்க ஆரம்பித்தார்கள். சினிமாவில் பாடுவதற்கு மட்டுமே எனக்குச் சம்மதம் அளித்திருந்த கணவர், அதற்கான வாய்ப்புக் கிடைக்காததால்தான் நடிக்க ஒப்புக் கொண்டேன் என்று நன்றாகத் தெரிந்திருந்தும் நான் தனியாக ஷூட்டிங்குக்குச் செல்வதை ஆட்சேபித்தார். அவர் வருவதால் எங்கள் இருவருக்குமே தர்ம சங்கடமாக இருக்கும் என்பதுடன், சினிமா வட்டாரங்களில் அதுவே அனாவசிய பிரச்னைகளுக்கு இடம் கொடுக்கும் எனச் சுட்டிக்காட்டிய பிறகு ஒருவாறு ஒப்புக் கொண்டார்.

ஒருவழியாக எல்லோரையும் சமாதானப்படுத்தியாயிற்று. இனி கைக் குழந்தையைப் பார்த்துக் கொள்ள ஏற்பாடு செய்தாக வேண்டும். குப்பம்மா என்ற பதினோரு வயதுச் சிறுமியை அதற்கு அமர்த்தினேன். அவள் பெயரை 'லக்ஷ்மி' என அவள் சம்மதத்துடன் மாற்றினேன். முதல் ஷூட்டிங் தினத்தன்று குழந்தையைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளும்படி ஆயிரம் முறை லக்ஷ்மியிடம் சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.



✱ பானுமதி : முதல் பாராட்டு

என்.டி.ஆருடன் நடித்த அந்த முதல் காட்சியைப் பற்றி ஏற்கெனவே கூறியிருக்கிறேன். அப்போது எனக்கிருந்த மனநிலையும் உங்களுக்குத் தெரியும். ஷூட்டிங் முடிந்ததும் முதல் காரியமாக குழந்தை நினைவு தான் வந்தது.

அதற்கேற்றாற்போல், வீடு வந்து சேர்ந்ததுமே புட்டிப் பால் குடிக்க மறுத்த குழந்தை நாள் முழுதும் பட்டினியாக இருந்ததாகச் சொன்னாள் லக்ஷ்மி. பொங்கி வந்த துக்கத்தை அடக்கிக் கொண்டு, குழந்தையை வாரி அணைத்துச் சமாதானப் படுத்த முற்பட்டேன்.

(தொடரும்)

## சேதிகேட்டோ!



# முதல்வருக்குக் காரோட்ட மறுத்த டிரைவர்!

அண்மையில் கேரள முதல்வர் கருணாகரன் திருச்சூரிலிருந்து குருவாயூர் புறப்பட்டார். முதல்வருக்காகக் கேரள சுற்றுலாத் துறையின் காருடன் அதன் டிரைவர் கபிலன் தயாராக நின்றார். ஆனால் கார் புறப்பட்டதுமே ரிப்பேர் ஆகிவிட்டது! அதிகாரிகள் பரபரப்படைந்து ஒரு தனியார் காரை ஏற்பாடு செய்தார்கள். டிரைவர் கபிலனோ, ''தனியார் காரை ஓட்ட 'டியூட்டி சார்ட்'' தரவேண்டும்!'' என்று கூறிவிட்டார்.

வேறுவழி இன்றி முதல்வர் வேறொரு டிரைவருடன் குருவாயூர் சென்றுவிட்டார். முதல்வர்க்குக் கார் ஓட்ட மறுத்த டிரைவர் கபிலனை திருச்சூரிலிருந்து காசர்கோடுக்கு அரசு டிரான்ஸ்பர் செய்து விட்டது. 'நான் விதிகளின் படி நடந்து கொண்டதற்காகத்தானே இந்த தண்டனை' என கபிலனும் இப்போது நீண்ட விடுமுறை எடுத்து காசர்கோடு போகாமல் இருக்கிறார்.

கபிலன் மீது டிரான்ஸ்பர் நடவடிக்கை எடுத்ததற்குத் தொழிற் சங்கமும் கண்டனம் தெரிவித்துள்ளது. டிரான்ஸ்பரை ரத்து செய்யாவிட்டால் போராட்டத்தில் இறங்குவோம் என்று கூறி உள்ளது!

●● நாம் உபயோகப்படுத்தும் எடைக்கற்கள், புது டெல்லியிலுள்ள நேஷனல் பிசிக்கல் லெபாரட்டரியில் (N.P.L.) உள்ள எடைக் கற்களை அடிப்படையாக வைத்துத்தான் தயாரிக்கப்படுகின்றன. அங்குதான் ஒவ்வொரு எடையையும் பிளாட்டினக் கலவைகளால் உருவாக்கி வைத்திருப்பார்கள். மாநிலங்களில் உள்ள அரசு எடைகளில் ஏதாவது சந்தேகம் இருந்தால் புதுடெல்லி எடைக்கற்களோடு ஒப்பிட்டுச் சோதித்துப் பார்ப்பார்கள்.

சரி, புது தில்லி எடைக்கற்களை எதைக் கொண்டு சோதித்துப் பார்ப்பது? சில வருடங்களுக்கு ஒரு முறை டெல்லி எடைக்கற்களைப் பாரீசுக்கு அனுப்பி எடை போட்டுப் பார்ப்பார்கள். பாரீஸ்தான் உலக எடைக்கற்களுக்கு அதாரிட்டி!

இந்தத் தகவலை அண்மையில் கேரளா வந்திருந்த என்.பி.எல்லின் டைரக்டர் கோபால் கூறினார்.

- எஸ். எஸ். மணி.

பூதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பூதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka